# அவர் மனக்கவலையற்றிருக்க வேண்டும்...

மனித உயிர்களைக் காப்பாற்றுவது அவரது சாமர்த்தியத்தையும் ஒரே மனஉறுதியுடன் வேலை செய்வதையும் பொறுத்திருக்கிறது. தன் வேலையை தங்கு தடையின்றி செய்ய அவர் மனக்கவலையற்றிருக்கவேண்டும்.

அதனால்தான் அவரைப் போன்ற சிரத்தை காட்ட வேண்டிய தொழில்களில் ஈடுபட்டவர்கள் யூகோபாங்கின் நம்பிக்கையான சேவையை நாடியுள்ளனர். அவருடைய யூகோபாங்கின் கரண்ட் அக்கவுண்ட் அவரது வாடிக்கையான பண விநியோகங்களை பாங்கின் மூலம் கொடுக்க உதவுகிறது. பாங்கிற்கு கொடுக்கும் அவரது நிரந்தரக் கட்டளைகளால் ஒரு செக் எழுதும் நேரத்தையும் கூட செலவிடாது சேமிக்கிறார். மேலும், அவர் செலுத்திய தொகைகளுக்கும் பலவித செலவுகளுக்கு எடுத்த தொகைகளுக்குமான கணக்கை பாங்க் ஒழுங்காகவும், சீராகவும் வைத்துக்கொள்கிறது.






தலைமை காரியாலயம்:
கல்கத்தா

**நீங்கள் சேமிக்கலாம்—
யூகோபாங்க் உங்களுக்கு
உதவி செய்யும்.**

ASP UCO 3/69

சௌமிய, ஆடி 12 ★ 1969 ஜூலை, 27



# கல்கி
## பொருளடக்கம்







சென்னை, அமால்கமேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட், டைரக்டர் ஸ்ரீ எஸ். கிருஷ்ணசாமி B. A., F. C. A., அவர்கள் குமாரத்தி செல்வி: பானுமதிக்கும், சென்னை பாங்க் ஆப் பரோடாவில் ஆபீஸராக பணி புரியும் செல்வன்: என். சேதுராமன், B. Com., C. A. I. I. B., க்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும், மாலையில் நடைபெற்ற வரவேற்புக்கும், உறவினர்களும், நண்பர்களும், நகரப் பிரமுகர்கள் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர். வாழ்க மணமக்கள்!



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 28 ● இதழ் 52

# காங்கிரஸில் ஆதிக்கப் போட்டி

மத்திய சர்க்காரில் பதவி வகிக்கும் மந்திரி சபை உட்பட காங்கிரஸின் அதிகார பீடங்கள் அனைத்திலும் கோஷ்டிச் சண்டையைக் காண்கிறோம். பெங்களூரில் ஜனாதிபதித் தேர்தலுக்கு யாரை நிறுத்துவது என்பதில் போட்டி. அதில் பிரதம மந்திரியை எதிர்ப்பவர்கள் வெற்றி பெற்றனர். இந்தத் தோல்வி பிரதமரின் மனத்தை உறுத்தியது. டில்லிக்குச் சென்ற பிறகு தமது எதிர்ப்பாளரில் முதல்வரான மொரார்ஜி தேசாயிடமிருந்து நிதி மந்திரி பதவியை முன்னறிவிப்பின்றி அவர் பறித்துக் கொண்டு விட்டார். அதன் பிறகு உதவிப் பிரதம மந்திரி பதவியில் அவர் தொடர்ந்து இருந்து வர வேண்டும் என்று பிரதமர் கோரினார். 'கன்னத்தில் அறைந்து விட்டு மரியாதை செய்வதுபோல இருக்கிறது இந்த அழைப்பு' என்பது தேசாயின் கருத்து. எனவே உதவிப் பிரதமர் பதவியும் தமக்கு வேண்டாமென்று அவர் புறக்கணித்து விட்டார். இதன் விளைவாகப் பெரிய நெருக்கடி கட்சிக்குள் ஏற்பட்டிருக்கிறது. ராஜி செய்து வைப்பதில் சில தலைவர்கள் முனைந்தனர். அதன் விளைவு எவ்வாறாக இருந்தபோதிலும், வலுத்து வரும் கோஷ்டிச் சண்டை கலபத்தில் ஓய்ந்து விடாது.

பாங்குகளைச் சர்க்காரே எடுத்துக் கொள்ள வேண்டும், அதற்கு முன்னோடியாக அவற்றின் மீது அரசாங்க ஆதிக்கம் வலுப்பெற வேண்டும் என்று விரும்புவோரில் ஸ்ரீமதி இந்திரா காந்தி முக்கியமானவர். இந்தக் கோரிக்கை உட்படத் தீவிரமான பல யோசனைகளைக் கொண்ட ஒரு குறிப்பை பெங்களூரில் அவர் அ. இ. கா. கமிட்டியில் தாக்கல் செய்தார். கட்சி ஒற்றுமையைக் காப்பாற்றுவதாக நினைத்துக் கொண்டு மொரார்ஜியே இந்திராவின் திட்டத்தைக் கொண்ட தீர்மானத்தைப் பிரேரித்தார். அப்படி அவர் செய்தும் கூடப் பிரதம மந்திரிக்குத் திருப்தி ஏற்படவில்லை. டில்லி திரும்பியதும் தமது திட்டத்தைத் தாமேதான் நடத்தி வைக்க வேண்டுமென்று சொல்லி, நிதி இலாகாவை மொரார்ஜியிடமிருந்து பறித்து விட்டார். மொரார்ஜியுடன் கூட இதைப் பற்றி முன்கூட்டிப் பிரதமர் பேசவில்லை. திடீரென்று நிதி மந்திரியின் சீட்டைக் கிழித்து விட்டார். விடுதலைப் போராட்ட காலத்திலிருந்து பெரிய தலைவராக இருந்து வரும் ஒருவரின் கதியே இப்படி என்றால் மற்றவர்களைப் பற்றிக் கேட்க வேண்டியதில்லை. மூதிய தலைவர்கள் சிற்றமடைந்துள்ளனர். கோஷ்டி ஆதிக்கப் போராட்டம் எவ்வளவு மோசமாகி விட்டது என்பதைத்தான் இது காட்டுகிறது.

காங்கிரஸ் தலைவர்களின் கோஷ்டிச் சண்டையில் உண்மையில் பாதிக்கப்படுவது தேச நலமே. கொஞ்ச காலமாகத்தான் தொழில்கள் தலை தூக்கத் தொடங்கியிருக்கின்றன. அவை சரிவர வளர்ந்தோங்கி, வேலை வசதிகள் பெருகி, தேசம் சுபிட்சமடையச் செய்வது எப்படி என்பதுதான் அடிப்படை விஷயம். அதில் யாரும் போதிய கவனம் செலுத்தவே இல்லை. ராஜீயவாதிகளைப் பழைய போக்கினர், சோஷலிஸ்டுகள் என்று பிரித்துப் பேசும் கோஷம்தான் வென்றது. தேசத்தின் சுய நம்பிக்கை, வலிமை, க்ஷேமலாபம் ஆகியவற்றுக்கு வேண்டிய உடனடியான பணிகள் புறக்கணிக்கப்பட்டு விட்டன. சந்தர்ப்பவாதம் மேலோங்கி விட்டது. ஆகையால்தான் பொருளாதாரக் கொள்கை விஷயத்திலும், ஜனாதிபதி பதவிக்கான அபேட்சகர் விஷயத்திலும் ஒரே சீரான ஒற்றுமை தலைவர்களிடையே காணப்படவில்லை.

பெங்களூரிலும் பிறகு டில்லியிலும் ஸ்ரீமதி இந்திரா காந்தி கையாண்ட உபாயங்களினால் தேசத்தில் பரவலாகக் கவலை ஏற்பட்டிருக்கிறது. அது மட்டுமல்ல. அயல் நாடுகளிலும் நமது மதிப்பு பெரும்பாலும் குறைந்திருக்கிறது. கோஷ்டிச் சண்டைகள் வலுத்தால் நிலைமை மிகவும் மோசமாகும்.

காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் இதைத் தமக்குள் தீர்த்துக் கொள்ள முயலக் கூடும். ஆனால் ஒரு பொதுத் தேர்தலில்லாமல் அடிப்படையான கொள்கை விஷயங்களில் பைசல் காண்பது சுலபமல்ல.

பாங்குகளைச் சர்க்காருக்குச் சொந்தமாக்கி விட வேண்டுமென்பதன் நோக்கமென்ன? ஆளும் கட்சியினர் ராஜீய அனுகூலங்களை அடைவதற்காக பாங்குகள் தரும் வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறார்கள். அதுவல்ல இன்றையத் தேவை. பெர்மிட் — லைசென்சு முறை ஏற்படுத்துகின்ற ஏகபோகங்களிலிருந்து தொழில்களை விடுவித்தாக வேண்டும். தாராளமான போட்டியும், நிர்ப்பந்தமற்ற வெளிப்படையான வர்த்தக வாய்ப்பு வசதியும்தான் இன்றையத் தேவைகள். அதிகார வேட்டையும் ராஜீயப் போட்டிகளும் மக்களுக்கு அலுத்துவிட்டன. ஆனால் பாங்குகளை விவகார விஷயமாக்கி ஆதிக்கப் போட்டியில் பிரதம மந்திரி இறங்க முயல்வது உண்மையில் அவரது பலவீனத்தைக் காட்டுகிறது. எப்படியாவது அதிகாரம் தம் கையில் இருந்தால் போதும் என்று நினைக்கும் வகையில் அவரது மனம் திரும்பி விட்டது வருந்தத் தக்கது.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ராஜீய நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்வதற்காகவே பாங்குகளைத் தேசவுடைமையாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்று பேசப்படுகிறது. வேறு ஒரு காரணமும் எனக்குப் புலப்படவில்லை. தமது நிதிகளை ரகசியமாக, சட்ட விரோதமான காரியங்களுக்கு பாங்குகளால் பயன்படுத்த முடியாது. விதிகளும் நடைமுறைகளும் கண்டிப்பாக இருக்கின்றன. தமக்கு வரும் டெபாசிட்டுகளுக்கு அவை வட்டி கொடுக்கின்றன. அதைவிட அதிகமான வட்டியைக் கடன் பெறுவோரிடம் இருந்து அவை வசூலிக்கின்றன. அந்தக் கடன்களைத் தொழில்கள் பயன்படுத்திப் பொருள்களை உற்பத்தி செய்கின்றன. தேசிய வருமானம் உயர்வதற்கு இவ்வாறு பாங்குகள் துணை புரிகின்றன. பாங்குகளைத் தேசவுடைமையாக்குவது என்பதன் பெயரால் செய்ய விரும்புவது அவற்றைச் சர்க்கார் வசம் ஒப்படைத்து விடுவதுதான். மக்களின் பணத்தின் மீது சர்க்கார் முழு ஆதிக்கம் செலுத்த விரும்புகிறார்கள். யாருக்குக் கடன் தர வேண்டும் என்பதை முடிவு செய்வதற்கான வாய்ப்பையும் அதன் மூலம் பெற விரும்புகிறார்கள். அதிகாரிகளது நிர்வாகத்தின் கீழ் பாங்குகளுக்கு லாபம் கிடைக்காமல் நஷ்டம் வந்தால் அதைப்பற்றியும் சர்க்காருக்குக் கவலையில்லை. இந்த மனப்பான்மை மதியற்றது. நாசத்தையே விளைவிக்கும்.

பாங்குகள் தேசவுடைமையாவது தவிர்க்க முடியாதது என்கிறார் ஸ்ரீ சவான். இது தோல்வி மனப்பான்மையைக் காட்டுகிறது. "கம்யூனிஸம் தவிர்க்க முடியாதது; எனவே அதற்கு நாம் தயாராக வேண்டியதுதான்" என்பதைப் போன்றதே இந்தப் பேச்சு. மக்களின் நலனுக்கு விரோதமான எதையும் தவிர்க்க முடியாதது என்று கருதக்கூடாது. பாங்குகளைச் சர்க்காரின் ஏகபோக நிர்வாகத்துக்கு மாற்றி விடுவது மக்களின் நன்மைக்கு எதிரிடையானது. அதைத் தைரியத்துடன், துணிவுடன் எதிர்க்க வேண்டும்.

*

"பாங்குகளைத் தேசிய உடைமையாக்க வேண்டும் என்று பிரதமர் இந்திரா காந்தி கோரியிருப்பது அரசியல் அதிகாரத்தைத் தம்மிடமே நிலைக்கச் செய்துகொள்ள அவர் செய்யும் சூழ்ச்சியே ஆகும். வேறு வழிகள் இல்லாமையால் அவர் இந்த முறையைக் கையாண்டிருக்கிறார்." — இங்கிலாந்திலுள்ள பத்திரிகைகளில் வெளிவந்துள்ள விமர்சனங்



பிரபல தொழிலதிபர் திரு என். மகாலிங்கம் அவர்களின் புதல்வி செல்வி லோகசுந்தரி கருணாம்பாளுக்கும், செல்வன் முத்துகிருஷ்ண சக்திவேல் ஆனாயருக்கும் ஜூலை 2ந்தேதி பொள்ளாச்சியில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. தமிழகத்திலுள்ள பிரமுகர்கள் பலரும் இந்த விவாகத்துக்கு விஜயம் செய்தனர். திருமணத்தன்று தேவாரம், திருவாசகம், திருவருட்பாப் பாசுரங்களை ஓதுவாமூர்த்திகள் ஓதிப் பக்திச் சூழ்நிலையை ஏற்படுத்தினர். தமிழகத்திலுள்ள பல மடங்களின் பிரதிநிதிகள் வந்திருந்தனர். சென்னையில் நடைபெற்ற வரவேற்பு வைபவத்தில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி இசை விருந்தளித்தார். வரவேற்பு வைபவ தினத்தன்று ராஜாஜி விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தார். புதுமணத் தம்பதிகளுக்கு நம் நல்வாழ்த்துக்கள்! □

---

களின் சாரம் இதுதான் என்று 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகைக்கு லண்டனிலிருந்து வந்துள்ள செய்தி கூறுகிறது.

''தமது சகாக்களுடன் ஸ்ரீமதி இந்திரா காந்தி புரிந்து கொண்டிருக்கும் அதிகாரச் சண்டையை பாங்குத் துறைக்கு இப்போது விஸ்தரித்திருப்பது பிரதமருடைய சொந்த பலவீனத்தைக் காட்டுவதோடு, என்ன நேர்ந்தாலும் அதிகாரத்தைத் தம்மிடமே வைத்துக் கொள்ள அவர் தீவிர முயற்சி செய்கிறார் என்பதையே குறிக்கிறது'' என்று 'பைனான்ஷியல் டைம்ஸ்' என்ற லண்டன் பத்திரிகை குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறது.

சமீப கால நடவடிக்கைகளினால் இந்திரா காந்தி மட்டும்தான் அவமானம் அடைந்திருக்கிறார் என்பதல்ல. ஸ்ரீமதி இந்திரா காந்தி தவறான ஆலோசனைகளை ஏற்றுக் கொண்டு தவறான நடவடிக்கைகளை எடுத்ததால் உலகக் கண்ணோட்டத்தில் பாரத தேசத்தின் கௌரவமே குன்றிப் போயிருக்கிறது.

# தகாத செயல்

பாங்குகளில் மிகப் பெரியளவாக இருக்கும் பதினான்கை ஒரு அவசரச் சட்டத்தின் மூலம் யூனியன் சர்க்கார் எடுத்துக்கொண்டு விட்டது. இது தேசத்தில் பேரதிர்ச்சியை விளைவித்துள்ளது. இந்த அவசரச் சட்டத்தின் மூலம் நிச்சயமற்ற நிலைமை பரவலாகத் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. வேகமான பொருளாதார வளர்ச்சி இதனால் நிச்சயமாகப் பாதிக்கப் பெறும் எல்லாத் தொழில்களுமே தமது கடன் தேவைகளுக்கு இனி சர்க்காரையே நம்பி யிருக்கும்படி ஏற்படுவது பேராபத்தானது. இந்த அவசரச் சட்டத்தைக் கொண்டு வந்திருப்பது, சர்வாதிகாரத்தன்மை உடையது என்பதில் ஐயமில்லை. சுதந்திரத்தை விரும்பும் எவரும் கவலை கொள்ளவே செய்வர்.

# என்ன சேதி?

## ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவப் பெருமாள்

நம்மை ஆராதிப்போருக்கு மக்கட் பேறு, கல்வி, ஞானம், காணி, மனையறம், நீண்ட ஆயுள் எல்லாம் தருபவர் ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவப் பெருமாள். குதிரை முகம் படைத்த இந்த விஷ்ணுமூர்த்தியை வழிபட்டே முற்காலத்தில் நிலங்களில் நெல் விதைப்பர். அதனால் நெற் பயிர்கள் செழுமையாக வளர்ந்து அதிகமான பலனைத் தந்தனவாம். இதைப் பெரியாழ்வார்:

"கரிய முகில்புரை மேனிமாயனைக்
கண்ட சுவடுரைத்து,
புரவி முகஞ் செய்து செந்நெலோங்கி
விளைகழனிப் புதுவை"

(பெரியாழ்வார் திருமொழி 4-1-10)

என்று அனுபவிக்கிறார்.



இந்த அவதார மகிமையை நன்கு உணர்ந்து சென்னைக்கு அருகில் உள்ள நங்கநல்லூர் பக்தர்கள் ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவப் பெருமாளுக்குத் திருக்கோயில் நூதனமாக அமைக்க நன்முயற்சி எடுத்து வருகிறார்கள். அது பூர்த்தியாவதற்கு ஆஸ்திகர்கள் உதவ வேணும். காரியதரிசி, திருப்பணிக் கமிட்டி, வேதாந்த ஸ்தாபன சபை, 7, 38-வது தெரு, நங்கநல்லூர், சென்னை-61 என்ற விலாசத்துக்குப் பொருள் அனுப்பலாம்.

## ஜப்பானியர் ரசித்த 'கட' வாத்தியம்

நமது நாட்டின் நாத வாத்தியங்களில் வெளிநாட்டவர் பெரிதும் ரசிக்கும் "கட" வாத்தியத்தின் நுணுக்கங்களையும் வெண்கல நாதத்தையும் ஜப்பான் மக்களுக்கு அறிமுகப் படுத்தி வைக்கும் வாய்ப்பு பெங்களூர் கட வித்வான் மஞ்சுநாதனுக்குச் சமீபத்தில் கிடைத்தது. 1970 உலகச் சந்தையை யொட்டித் தயாரிக்கப்படும் "உலகக் கலாசாரப் புதுமை இனங்கள்" டெலிவிஷன் நிகழ்ச்சியில் கலந்து கொள்ளுவதற்காகத் திரு மஞ்சுநாதன் ஜப்பான் சென்று தமது திறமைகளை ஜப்பானிய மக்கள் வியக்கும் வண்ணம் வெளிப்படுத்தி விட்டு, நாடு திரும்பியுள்ளார். வெளிநாட்டினர் அழைப்பின்மீது மைசூரிலிருந்து அயல் நாடு சென்ற முதல் நாத வாத்திய விற்பன்னர் மஞ்சுநாதன்தான். இவரது வாத்தியத் திறமையை அந்நாட்டினர் மிகவும் பாராட்டினர் என்று மாலோ நாகோ என்ற 'ஃபியூஜி டெலிகாஸ்டிங் கம்பெனி' நிகழ்ச்சித் தயாரிப்பாளர் மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறார்.

## பின்னி உயர் நிலைப் பள்ளி

பின்னி ஸ்தாபனத்துக்கு 1969ம் ஆண்டு இரண்டு வகையில் முக்கியத்துவம் வாய்ந்தது. பின்னி என்ற பெயருக்கு மூல காரணமாயிருந்த தாமஸ் பின்னி பிறந்த இருநூறாவது ஆண்டு 1969. தனித் தனியே இயங்கிக் கொண்டு வரும் பெங்களூர் கம்பனி, பட்டு நெசவு ஆலைகளும், பக்கிங்ஹாம் கர்நாடகக் கம்பெனியும், பின்னி என்ஜினியரிங் கம்பெனியும் மற்றும் இரண்டு கம்பெனிகளும் ஒன்றாக இணைந்து 'பின்னி லிமிடெட்' என்ற ஒரே பெயரில் சுமார் ஏழு கோடி மூலதனமுள்ள ஒரு பிரும்மாண்ட ஸ்தாபனமாக இனி இயங்கப் போகிறது.

இந்த இரண்டு வகை முக்கியத்துவத்தை நினைவுபடுத்தும் வகையில் 'பின்னி உயர் நிலைப் பள்ளியை' பி அண்டு ஸி தொழிற்சாலைகள் பக்கத்திலேயே சென்ற ஜுலை 12ந் தேதி தொழிலமைச்சர் திரு ப. உ. ஷண்முகம் தொடங்கி வைத்தார்.

இந்தப் பள்ளி தோன்ற முக்கிய காரணமாயிருந்தவர் பின்னி ஸ்தாபன முதல்வர் ஜெப்பாரெஸ். பின்னி ஊழியர்களின் கூட்டுறவுச் சங்கம் நன்கொடையாக அளித்த 25,000 ரூபாய் நிதியும், பின்னி ஸ்தாபனம் சுமார் மூன்று லட்சம் ரூபாய் செலவில் மூன்று மாதங்களுக்குள் பழையதொரு கட்டடத்தை செப்பனிட்டுத் தந்ததும் பேருதவியாக இருந்திருக்கின்றன.



## ஆசாரியர் அருள்வாக்கு

பகவான் சங்கரனே! உலகத்து நாயகனே! உனது சரிதமான சாகரத்தில் நீர்ப்பெருக்கை என் புத்தி என்ற ஏற்றத்தில் வார்த்தையாகிற குடத்தால் இறைத்து, தண்ணீரைக் கவியென்னும் வாய்க்கால் வழியாக பக்தியாகிய பயிர்கள், விளைக்கப்பெற்றுள்ள மனம் என்ற நிலத்தில் பாய்ச்ச, பயிர்களும் விளைந்து பலனைத் தர, உமது சேவையையே செய்யும் சேவகனான எனக்குக் கொடிய பஞ்சமான வாழ்க்கையைப் பற்றி பயம் ஏது? கிடையவே கிடையாது.

1. மேற்கிந்தியத் தீவு கிரிக்கெட் கோஷ்டிக்கும் இங்கிலாந்து கிரிக்கெட் கோஷ்டிக்கும் நடைபெற்ற மூன்று டெஸ்டுகளில் இரண்டில் இங்கிலாந்து கோஷ்டி வெற்றி பெற்றிருக்கிறது. லார்ட்ஸில் நடைபெற்ற இரண்டாம் டெஸ்ட் நான்காம் நாளன்று எலிஸபெத் ராணி விஜயம் செய்தார். 2. ஞானஒளி வைரவிழா நாடகத்துக்கு பத்மஸ்ரீ சிவாஜி கணேசன் தலைமை வகித்து திரு என். எஸ். நடராஜனையும் மற்ற கலைஞர்களையும் மனதாரப் பாராட்டினார். இவ்விழாவின்போது கல்வி நிறுவனத்தின் சார்பில் முன்னை ஆசிரியர் திரு கி. ராஜேந்திரன் ஒரு புகைப்பட ஆல்பத்தை அன்பளிப்பாக என். எஸ். என். தியேட்டர்ஸுக்கு வழங்கினார். மேஜர் சுந்தரராஜன் அதனைப் பெற்றுக் கொண்டார். படத்தில் சிவாஜி, கே. சுந்தரத்துக்குப் பரிசு வழங்குகிறார். 3, 5. சென்னை இந்தியன் எக்ஸ்பிரஸ் தொழிலாளர்களின் குழந்தைகளுக்குச் சீருடைகளும் நோட்டுப் புத்தகங்களும் தமிழக முதன்மந்திரி திரு மு. கருணாநிதி, எக்ஸ்பிரஸ் ஸ்தாபனத்தின் சார்பில் வழங்கினார். இந்த வைபவத்துக்கு 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஜெனரல் மானேஜர் திரு டி. கே. தியாகராஜன் தலைமை வகித்தார். விழாவுக்கு முதன் மந்திரி பகவன் தாஸோடு வருகிறார். 4. ராஜா அண்ணாமலை மன்றத்தில் இளங்கோ கலை மன்றத்தின் சார்பில் குமாரி ஹேமாமாலினியின் 500-வது நடன நிகழ்ச்சி நடைபெற்றது. அவ்வமயம் தமிழக முதல்வர் தலைமை தாங்கி சிறப்புப் பட்டங்களை அளித்தார்.











# காமம் தொலைத்த ராமன்

ரா. கணபதி

அவர் மெய்யாகவே துளசியாகக் கூடாதா? எனக்கு மாலை சூட்டினாற் போல் திருமாலுக்குத் துளசி மாலை அணிவித்து அகமகிழக் கூடாதா?

நள்ளிரவு.

ஊழிக் காற்றுப் போல் சண்டமாருதம் சுழலாயிடுகிறது.

பிரளயம் போல் மழை விண் கிழிந்து வர்ஷிக்கிறது.

உலகங்கள் மோதிக் கொண்டு உடைவது போல் இடியோசை.

சம்ஹார ருத்திரன் அக்கினியைச் சக்கராகாரமாகச் சுழற்றுவதுபோல் நாற்றிசையிலும் மின்னல் மயம்.

மின்னலா? அக்கினி வாளா? இந்த வாள் வானமா தேவியின் தேகத்தை வெட்டுவதால் கொட்டும் குருதிதான் மழையா?

பயப் பிராந்தியில் படுக்கையோடு ஒட்டிக் கொண்டு கிடந்தாள் மமதா தேவி.

அந்த மழையிலும் அவளது வயோதிகப் பெற்றோர் — வயோதிகத்தால் கண்ணும் காதும் அடைத்துப் போன பாக்கியசாலிகள், மின்னலின் ஒளியும், இடியின் ஒலியும் தெரியாமலே நன்கு உறங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கீழே உறங்குகிறார்கள். மமதா மச்சில் படுத்திருக்கிறாள்.

மமதாவுக்கு உறக்கம் வரவில்லை. உறக்கம் வராததற்கு மழை மட்டும் காரணம் அல்ல. இன்றைக்குத்தானே மழை? இதற்கு முன்பும் கடந்த சில தினங்களாக அவள் உறக்கம் காணவில்லை.

கணவரை விட்டுப் பிரிந்த நாளாக அவளுக்கு நித்திரை இல்லை.

ஆனால் இது கவிகள் வர்ணிக்கும் பிரிவுத் துயரிலோ விரக தாபத்திலோ ஏற்பட்டதல்ல.

எல்லையற்ற உடற்பசி பிடித்த கணவனிடமிருந்து மீண்டதில் அவளுக்கு நிம்மதியே!

ஆயினும் அவள் உறக்கம் கொள்ளவில்லை எனில் அதற்குக் காரணம், தான் இல்லாத போது 'அவர்' எப்படியெல்லாம் கெட்டலைகிறாரோ என்ற கவலைதான்.

"கெட்டலையட்டுமே! எக்கேடு கெட்டுப் போகட்டுமே! நான்தான் அந்தக் காமாந்தகருடன் காலம் கடத்த முடியாதென்று வந்துவிட்டேனே! என் மாமியாரே என்னை வாழ்த்தித்தான் வழியனுப்பி வைத்திருக்கிறார். இனிமேல் எனக்குச் சம்பந்தமில்லாத ஒரு மனிதர் எப்படிப் பாழாகப் போனால் எனக்கென்ன?"

மமதாவின் புத்தி இப்படியெல்லாம் தர்க்கம் பேசிற்று. ஆனால் தர்க்கத்தினால் இதயத்துக்கு விடை சொல்ல முடியுமா?

மீண்டும் மீண்டும் மமதாவின் மனம் தனக்கு மாலையிட்ட மணாளனை நினைந்தே வருந்தியது.

தனக்கு மாலையிட்ட அவர் பெயர் மாலவனின் மாலையாகும் 'துளசி' என்பது. ஆகா, துளசி எவ்வளவு புனிதமானது! பிருந்தையின் ஆசை யாவும் எரிந்த பஸ்மத்தில் பிறந்தது துளசி! அந்தப் புனிதப் பெயரை வைத்துக் கொண்டு 'அவர்' ஏன் அப்படிப் பெண் மோகம் பிடித்துத் திரிந்தார்!

அவர் மெய்யாகவே துளசியாகக் கூடாதா? எனக்கு மாலை சூட்டினாற் போல் திருமாலுக்குத் துளசி மாலை அணிவித்து அகமகிழக் கூடாதா? வாக்கிலே துளசியாகி அவன் புகழை மணக்கப் பேசக் கூடாதா? மனத்திலே துளசியாகி அவனையே சுகந்தத்துடன் எண்ணக் கூடாதா?

இந்த எண்ணங்களில் மண்டையை உடைத்துக் கொண்டாள் மமதா. அவளது கணவர் துளசிக்கு அந்தப் பெயர் பொருந்தாதது போலவே மமதாவுக்கும் அவளது பெயர் பொருந்தத்தான் இல்லை. மமதையே இல்லாத அவள், மமகாரம் முழுதும் விட்டு, பதியே நினைவாக மண்டையை உடைத்துக் கொண்டாள். வான மண்டலமும் உடைந்தது இடிகளிலே! மின்னல்கள் வெட்டு வெட்டென்று வெட்டின.

'இருண்ட என் மனத்தில் கணவரின் வாழ்வுக்கு வெளிச்சம் கூட்ட இப்போதே ஒரு மின்னல் மின்னாதா?' என ஏங்கினாள் மமதா.

மீண்டும் மின்னல்.

அந்த மின்னல் ஒளியில் அங்கே மனித உருவம் நிழலாடியது.

ஒரு விநாடி மமதாவின் ரத்தம் உறைந்து விட்டது.

இந்தப் பிரளய மழையில் கூட ஒரு திருடனால் எப்படி வெளியே தலை காட்ட முடிந்தது?

அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தாள் மமதா.

"அலறாதே, நான்தான்" என்று ஆசைமயமான குரல் வந்தது.

மமதாவின் மானம் அலறலை விட்டது. ஆனால் மனம்?

'ஆகா, வந்திருப்பது **அவராக** இல்லாமல் வேறு மெய்யான திருடனாகவே இருந்திருக்கக் கூடாதா? தாயும் தாரமும் தூற்றிய பின்னும் அதைப் பொருட்படுத்தாமல் மானமிழந்து, இந்த ஊழி மழையில் பெண்டாட்டியைத் தேடி வந்திருக்கும் காம வெறியரைக் கண்டு எப்படி அலறாமல் இருப்பது?

மீண்டும் மீண்டும் மின்னல்கள்! தெப்பலாக நனைந்து வந்திருந்த கணவர் துளசியை மமதாவுக்கு அவை காட்டிக் கொடுத்தன. இது ஏன், பிணத்துக்குப் போர்த்தும் கப்பன் துணியை வேறு சுற்றிக் கொண்டிருக்கிறார்? அது மட்டுமல்ல. அவள் சில நாட்களுக்கு முன் கண்டதற்கும், இப்போதைக்கும் இடையே அவரது தேகத்தில் எப்பேர்ப்பட்ட மாறுதல்! ஸ்வர்ண விக்கிரகமாக இருந்தவர் ஏன் இப்படிக் கறுத்துக் காண்கிறார்! ஆகா! இதென்ன! அவர் வந்த ஒரு சில விநாடிகளுக்குள்ளேயே அவரது தேகம் ஏன் இப்படி மேலும் மேலும் நீலம் பாரித்துப் போகிறது?

காமுகனை வெறுத்த மமதா மறைந்தாள்; அங்கு கற்பரசி மமதா மட்டும் நின்றாள். "ஐயோ ஸ்வாமீ! தங்களுக்கு என்ன ஏற்பட்டுவிட்டது? ஏன் இப்படி நீலம் பாரி...ஆ, ஏன் தள்ளாடி விழுகிறீர்கள்?" என்று அடிவயிற்றிலிருந்து அரற்றியபடி துளசியைத் தாங்கிக் கொண்டாள் மமதா.

''நான்... நான் .... பிடித்துக் கொண்டு ஏறிய கொடி....'' மேலே பேச முடியவில்லை துளசியால்.

'கொடியைப் பிடித்துக் கொண்டு ஏறினாரா? ஆம், கீழே கதவைத் தட்டியிருக்கிறார். காது மந்தமான பெற்றோருக்கு அது கேட்கவில்லை. இடியோசையில்லை என்று அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. எனவே, ஏதோ கொடியைப் பிடித்துக் கொண்டு மாடிக்கு ஏறி வந்திருக்கிறார்! ஆனால் இங்கு கொடி ஏதுமே கிடையாதே!'

மமதா மழையையும் பொருட்படுத்தாமல் வெளி மாடிக்கு வந்து சுவர்க் கட்டையில் நோட்டம் விட்டாள்.

மின்னல் பின்னலிட்டது.

மச்சுச் சுவர்க் கட்டைக்கும் கீழே பூமிக்குமாக இன்னொரு மின்னல் தெறித்து சென்றது!

'மின்னலா? இல்லை, பாம்பு! நீண்ட நெடும் பாம்பு! இந்தப் பாம்பைப் பிடித்துக் கொண்டுதான் அவர் மேலேறி வந்திருக்கிறார். காம விஷத்தில் தோய்ந்த அறிவுக்குப் பாம்பு என்றும், கொடி என்றும் பேதம் தெரியவில்லை. நல்ல வேளை! இந்தப் பாம்பு கடிக்காது. ஆனால் இதன் மூச்சுக் காற்றால் உடல் சிறிது காலம் நீலமாகும்; அதோடு ஒய்ச்சலும் தள்ளாமையும் சிறிது போது இருக்கும்; அவ்வளவே!'

கணவரிடம் வந்தாள் மமதா.

''ஸ்வாமீ! பாம்பை அல்லவா தாம்புக் கயிறு போல் நினைத்து மாடிக்கு வந்திருக்கிறீர்கள்? ஆனால் அந்தப் பாம்புக்குப் பயப்படவேண்டியதில்லை. தங்களுக்குள்ளேயே ஒரு விஷப் பாம்பை நன்கு படமெடுத்து ஆட வைத்திருக்கிறீர்களே!'' என்று நெஞ்சடைக்கக் கூறினாள் மமதா.

ஆயாசத்தில் துளசி ஏதும் பேசவில்லை.

மமதாவேதான் பேசினாள்: ''உங்களிடம் பேசிப் பயனென்ன? பாம்பணையில் துயில்கிறானே அவனிடம் முறையிடுகிறேன். சானிய



காந்திஜி விரும்பிய கீதம்

சர்ப்பத்தின் மீது நின்றாடி அவனது விஷத்தை உமிழ வைத்தானே அவனிடம் மன்றாடுகிறேன். அவன்தான் நச்சுப் பொய்கையாய்விட்ட உங்கள் மனத்தை நிர்மல யமுனையாக்க வேண்டும்...''

யமுனை என்றவுடன் திடீரென ஒரு நினைவு வந்தது மமதாவுக்கு. ''ஸ்வாமி! தாங்கள் மாடி ஏறி வந்தது இருக்கட்டும். யமுனையை எப்படிக் கடந்து வந்தீர்கள்? இந்த நள்ளிரவில், கொட்டும் மழையில் உங்களுக்கு எப்படிப் படகு கிடைத்தது?'' என்றாள்.

''ஏதோ ஒரு கட்டை... வெள்ளத்தில்... மிதந்தது... அதைப் பற்றிக் கொண்டு...'' என்று முனகினான் துளசி.

மின்னியது. துளசி போர்த்திருந்த கம்பள் துணியை மின்னல் நன்றாகக் காட்டிக் கொடுத்தது.

மமதாவின் சிரத்துக்குள் சிந்தனை மின்னல் தாக்கியது.

''ஐயோ, பிரபுவே! இப்படிப்பட்ட வெறியா உங்களை ஆட்கொள்ள வேண்டும்? வெள்ளத்தில் நீங்கள் பற்றிக் கொண்டது கட்டை அல்ல ஸ்வாமி, கட்டை அல்ல. யமுனையில் ருத்ர பூமியில் வைத்த பிணம் வெள்ளத்தில் அடித்து வரப்பட்டிருக்கிறது. அதைத்தான் தெப்பமாகப் பிடித்து வந்திருக்கிறீர்கள். அதன் மீது இட்டிருந்த கம்பள் துணியைத்தான் போர்த்திக் கொண்டு வந்திருக்கிறீர்கள்...''

அதற்குமேல் கணவனிடம் பேசப் பிடிக்காமல் வான மண்டலத்தை நோக்கி முறையிட்டாள் மமதா.

''ஆகாச வாணியே! நீதான் இடியாகக் குரல் கொடுக்கிறாய். உன்னுடைய மின்னல் கத்தியை என் மேல் வீசி என்னை அழைத்துக் கொள். இந்த மனிதரின் மோகாந்தகாரத்துக்குக் காரணமான நான் இனி வெள்ளத்தில் சாகிறேன். இந்தக் கம்பள் துணியை எனக்குப் போர்த்தி இவர் தகனம் செய்யட்டும். இவரது ஆசை வெறிக்கு ஆஸ்பதமாக இருந்த சுந்தர தேகம் பிடி சாம்பலானதைப் பார்த்த பின்பாவது இவருக்குச் சிறிது வைராக்கியம் வரட்டும். அதன் பின், இன்று என்னை அடைவதற்காக இவர் கொண்டிருந்த ஆவேச வெறியில் ஆயிரத்தில் ஒரு பங்காவது பகவானின் பொருட்டு இவர் பெறட்டும்...''

சவம் போல் கிடந்த துளசி ''மமதா'' என்று அழைத்தான். அது முற்றிலும் புதிய குரலாக இருந்தது.

பட்ட மரத்தில் துளிரைக் கிளைக்கச் செய்த அதே மழை, ஆசை கிளைத்த அவரது மனத்தைப் பட்ட மரமாக்கி விட்டது என்பதற்கு அந்தக் குரலே அத்தாட்சியாயிருந்தது.

துளசி சொல்வான்: ''மமதா! உன்னுடைய அன்பு வேள்வியில் என் ஆசை ஆஹுதியாகி எரிந்து விட்டது. நீ சாக வேண்டாம். உன்னுடைய பழைய துளசியே செத்துவிட்டான். அவன் கம்பளைப் போர்த்திக் கொண்டது அந்தப் பழம் பிறவி தொலைந்ததற்குப் பொருத்தமாகி விட்டது. நீ சாக வேண்டாம்...''

மமதாவின் நெஞ்சு நன்மையை நனைந்தது. அன்போடு கணவனை நெருங்கினாள்.

''என்னைத் தொட்டு விடாதே யம்மா!'' என்றான் துளசி. ''இதுவரை என் தாரமாக இருந்தாய். இன்றிலிருந்து நீ என் குரு. என்னைத் தொட்டுவிடாதே!'' என்றான்.

மழை சடாரென்று நின்றது.

முகில் கூட்டங்கள் இருந்த இடம் தெரியாமல் விலகின.

வைர மாலை அணிந்த ஸ்ரீ ராமச்சந்திரனின் திருமேனியாகத் தாரகைகள் கொத்துக் கொத்தாகப் பூத்துத் தெள்ளிய நீல வானம் சாந்தி கமழ்ந்தது.

தள்ளாடித் தள்ளாடி எழுந்து நடந்தான் துளசி. உடலில்தான் தள்ளாட்டம்.

மனம் உறுதிப்பட்டு விட்டது.

அடுப்பிலிட்ட பாகாக உள்ளம் உருகப் பதியைப் பார்த்தபடியே சமைந்து நின்றாள் மமதை.

தண்ணீரிலிட்ட பாகாக உறுதிப்பட்ட உள்ளத்துடன் துளசி திரும்பிப் பாராமல் சென்று கொண்டேயிருந்தான்.

(அடுத்த இதழில் முடியும்)

[கல்கி வெள்ளி விழா பரிசுத் திட்டத்தில் பரிசு பெற்றுக் கல்கி வாசகர்களுக்கு அறிமுகமான திரு ம. இராஜாராம் சிறந்த சிறுகதை எழுத்தாளர் என்பதோடு பொறி இயலாளரும்கூட. பட்டம் பெற்ற பின் உத்தியோக நிமித்தம் பெங்களூர் சென்ற திரு ம. இராஜாராம் அவர்களை அங்குள்ள பெரிய அரசினர் துறை தொழிலகங்களைப் பற்றி எழுதுமாறு கேட்டுக் கொண்டோம். அப்படி எழுத முற்பட்டபோது தமக்கு ஏற்பட்ட சில சுவையான அநுபவங்களை இந்தக் கட்டுரையில் அவர் விவரிக்கிறார். இதைத் தொடர்ந்து பெங்களூரிலுள்ள விமானத் தொழிற்சாலை, டெலிபோன் தொழிற்சாலை, ஹிந்துஸ்தான் மெஷின் டூல்ஸ், பாரத் எலெக்டிரானிக்ஸ் ஆகிய தொழிலகங்கள் பற்றி அவர் எழுதிய கட்டுரைகள் அவ்வப்போது கல்கியில் பிரசுரமாகும்.
— ஆசிரியர்]

# முன்னதாகச் சில விஷயங்கள்

## ம. இராஜாராம்

நம் நாட்டின் முக்கியமான சர்க்கார் துறை தொழிற்சாலைகளில் நான்கு, பெங்களூரிலேயே அமைந்திருக்கின்றன. பெங்களூரின் தட்ப வெப்ப நிலை, தண்ணீர் வசதி, இட வசதி முதலியன இதற்கான முக்கிய காரணங்களாகும். (இதைத் தவிர அரசியல் காரணங்களும் இருக்கின்றன என்றே வைத்துக் கொள்ளுங்கள்!) ஆனால், இப்போது இந்தத் தொழிற்சாலைகளின் காரணமாக உண்டாகிவிட்ட ஜனப் பெருக்கத்தினால் ஊரின் தட்ப வெப்ப நிலையே மாறி விட்டதாக — வெப்பம் கூடிவிட்டதாக — இங்குள்ளோர் கூறுகின்றனர்!

நம் குறைகள் நமக்கே தெரிந்தவைதாம். அடுத்தவருக்கும் நமது குறைகள் தெரியும் என்பதுவும் நமக்குத் தெரியும். இருந்தாலும் அடுத்தவருடன் பேசுகையில் முகமூடியைப் போட்டுக் கொண்டு பூசி மெழுகிப் பேசி விட்டால் நமது குறைகள் தெரியாது எனக் கற்பனை செய்துகொள்வது எத்தனை அசட்டுத்தனம் என்பதை நாம் எப்போது உணரப் போகிறோமோ, தெரியவில்லை.

பெங்களூரில் அமைந்திருக்கும் அரசினர் துறைத் தொழிற்சாலைகளைப் பற்றி எழுத வேண்டுமென்று நான் ஆரம்பித்த போது, "எங்கள் நிறுவனத்தில் சிறந்த விளையாட்டு வீரர்கள் இருக்கிறார்கள்; தொழிலாளர்களுக்கு இலவசமாகப் பால் கொடுக்கிறோம்; சினிமா பார்க்கத் திரையரங்கு கட்டியிருக்கிறோம்... இவைகளைப் பற்றியெல்லாம் எழுதுங்கள்" என்று ஒரு நிறுவனத்தில் கூறினார்கள். "சரி, நீங்கள் என்னவெல்லாம் உற்பத்தி செய்கிறீர்கள்?" என்று கேட்ட போது, "அதைப் பற்றி எழுதுவதானால் விசேஷ அனுமதி பெற வேண்டும்" என்று கூறி விட்டார்கள்!

இன்னொரு தொழிற்சாலையில் "எத்தனை பக்கம் எழுதுவீர்கள்?" என்று கேட்டார்கள். "சுமார் நான்கு பக்கங்கள்" என்றதும், "விளம்பரம் கொடுப்பதாயிருந்தால் பக்கத்துக்கு இத்தனை ரூபாய் வீதம் நான்கு பக்கங்களுக்கு இவ்வளவு" என்று கணக்குப் போட்டுப் பார்த்து விட்டு, மகிழ்ச்சியுடன், "சரி, எழுதுங்கள்!" என்றார்கள்!

மற்றொரு தொழிற்சாலையில் அவர்கள் அனுமதி வாயால் கொடுப்பதற்குப் பத்து நாட்களும் அதன் பின் கட்டுப்பாகக் கொடுப்பதற்கு இன்னொரு பதினைந்து நாட்களும் ஆயின. 'கட்டுரையை நாங்கள் தணிக்கை செய்துதான் பிரசுரிக்கலாம்' என்றும் கூறினார்கள். அவர்களை மொழிபெயர்த்துக் கொள்ளச் சொன்னால் இன்னும் ஆறு மாதங்கள் ஆகும் என்ற பயத்தில் என் தமிழ்க் கட்டுரையை நானே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துச் சமர்ப்பித்தேன். பொது ஜனத் தொடர்பு அதிகாரி அதைப் படித்துப் பார்க்க ஒரு வாரமாயிற்று. அதன்பின் அவர் மலர்ந்த முகத்துடன் (எல்லாப் பொதுஜனத் தொடர்பு அதிகாரிகளுமே முகத்தில் எப்போதும் மலர்ச்சியைப் பூசிக் கொண்டிருக்கிறார்கள்!) "நன்றாக எழுதியிருக்கிறீர்கள். இதில் தணிக்கைக்கு எதுவும் இருப்பதாக எனக்குப் படவில்லை. இருந்தாலும் எங்கள் மேலதிகாரியிடம் ஒரு வார்த்தை கேட்டு விடுகிறேன்" என்றார்.

அந்த ஒரு வார்த்தை என் காதுகளுக்கு எட்டப் பத்தே நாட்கள்தான் ஆயின. அந்த வார்த்தை இப்படி இருந்தது: "உங்கள் கட்டுரையில் தணிக்கை செய்வதற்கு ஒன்றுமில்லை. இருந்தாலும், ஒரு சம்பிரதாயத்துக்காக, பாதுகாப்பு அமைச்சுக்கு உங்கள் கட்டுரையையும் நீங்கள் தேர்ந்தெடுத்திருக்கும் புகைப்படங்களையும் அனுப்பி அவர்கள் அனுமதியையும் பெற்றுவிட்டால் தொல்லையில்லை என்று எங்கள் மேலதிகாரி அபிப்பிராயப்படுகிறார்."

இப்படிச் சொல்லி விட்டு அந்தப் பொது ஜனத் தொடர்பு அதிகாரி நட்புக் கலந்த இரகசியமான குரலில் என்னிடம் கூறினார்: "அது அவசியமே இல்லை என்று எனக்குப் படுகிறது. என்ன செய்வது? மேலதிகாரி இப்படிச் சொல்கிறார். எல்லாரும் தொடை நடுங்கிகள்!" எனக்கு வந்த சிரிப்பை நான்





அடக்கிக் கொண்டு, ''ஆமாம்!'' என்றேன்; ''ஒன்றும் கவலைப்படாதீர்கள்! டெல்லியிலிருந்து ஒரே வாரத்தில் பதில் வந்து விடும்!'' என்றார் அவர். நான் மெதுவாகச் சிரித்துக் கொண்டு, ''நீங்கள் நிஜமாகவே அப்படி நம்புகிறீர்களா? டெல்லி விஷயம் எனக்குத் தெரியும். அனுமதி கிடைத்து வருவதற்குள் ஒரு வேளை எனக்கு இப்படியொரு கட்டுரை எழுதியதே மறந்துவிடும்!'' என்றேன்.

நம்பினால் நம்புங்கள், இல்லாவிட்டால் விடுங்கள். டில்லியிலிருந்து சுமார் ஒன்றரை மாதத்தில் அனுமதி வந்து விட்டது. அவர்கள் கட்டுரை, புகைப்படங்கள் எதையும் திருப்பியனுப்பவில்லை. என்னிடம் நல்ல வேளையாகக் கட்டுரையின் பிரதி இருந்தது. புகைப்படங்களின் இன்னொரு 'செட்' பிரதிகளை அந்தப் பொதுஜனத் தொடர்பு அலுவலகம் எனக்குப் பெரிய மனம் பண்ணிக் கொடுத்தது. மறுபடியும் டில்லிக்கு எழுதி அந்தப் பிரதிகளை வரவழைக்கிறோம் என்று முதலில் கூறினார்கள். ஐயோ, தப்பினேன்!

நான் முதன் முதலில் அந்தப் பொதுஜனத் தொடர்பு அதிகாரியைச் சந்தித்தது முதல் இறுதியாக அனுமதி கிடைத்தது வரையிலும் சுமார் மூன்று மாதங்களுக்கு மேல் ஆயின. பொதுமக்களுக்குத் தம்மைப் பற்றிய விவரங்கள் தெரிவித்துக் கொள்வதில்தான் சர்க்கார் துறை நிறுவனங்களுக்கு எத்தனை சுறுசுறுப்பு!

இன்னொரு தொழிற்சாலையில் என்னை நேரில் காண அனுமதி கொடுத்து ஒரு நாளையும் குறிப்பிட்டு எனக்கு அத்தொழிற்சாலையின் பொதுஜனத் தொடர்பு அதிகாரி கடிதம் எழுதியிருந்தார். நான் சென்று ஒன்பது மணி முதல் காத்திருந்தேன். அவர் வீட்டிலிருந்து வரும் வழியில் அவரை அழைத்து வந்த தொழிலகத்தின் வாகனம் பழுதடைந்து விட்டதால் பதினொரு மணிக்கு மேல் வந்தார். வந்தவர் என்னிடம், ''வருத்தப்படுகிறேன். எனக்கு இன்று வேறு ஒரு வேலை இருப்பதை மறந்து உங்களை வரச் சொல்லி விட்டேன். அத்துடன் இன்று எங்களுக்கு அரை நாள். அதனால் நீங்கள் அடுத்த வாரம் இன்னொரு நாள் வாருங்கள்!'' என்று மிகவும் அநாயாசமாகக் கூறி விட்டார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் பெங்களூர் நகரப் போக்குவரத்து சர்வீஸைப் பற்றிக் கொஞ்சம் சொல்ல வேண்டும். இங்கு பெரும்பாலான ரூட்களில் ஓடுகிற பஸ்கள் இரண்டு அல்லது மூன்றுதான் இருக்குமெனத் தோன்றுகிறது. நமக்கு அதிர்ஷ்டமிருந்தால் அரை மணி நேர இடைவெளியில் அடுத்த பஸ் வந்துவிடும். இல்லாவிட்டால் ஒரு மணி நேரமோ, ஒன்றரை மணி நேரமோ காத்திருக்க வேண்டியதுதான். ஓட்டுனருக்கோ, நடத்துனருக்கோ விருப்பமில்லாவிட்டால் நடுநடுவில் 'ட்ரிப்'பையே ரத்து செய்து விடுவார்கள் என்று படுகிறது. பல சமயங்களில் பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருப்பவர்கள் தமக்கு வேண்டிய நம்பர் பஸ் எதிர்ப்புறமாகப் போவதைக் கண்டு மகிழ்ச்சியுடன், ''பஸ் போய் விட்டது!'' என்று ஆரவாரிப்பதைக் கண்டிருக்கிறேன். அதாவது, அந்த பஸ் போய் இன்னும் அரைமணி அல்லது முக்கால் மணி நேரத்தில் திரும்பி வந்து விடுமாம்!

கடைசியில் பஸ் பிதுங்கப் பிதுங்க வரும். காத்திருக்கிற கூட்டம் அலைமோதும். கண்டக்டர் தயக்கத்துடன், ''ஜாகா இல்லாரி!'' என்பார். கவலைப்பட வேண்டியதில்லை. சென்னை நகரப் போக்குவரத்து இயக்குநரின் வேதவாக்கான ''ஏறாதே!'' என்பது போல் அல்ல இது. அத்தனை நாகரிகத்தை இங்குள்ளவர்கள் இன்னும் கற்றுக் கொள்ளவில்லை. எப்படியாவது தொற்றிக் கொண்டு விட்டால் இறங்கச் சொல்ல மாட்டார்கள்!

நகரப் போக்குவரத்து இத்தனை வசதி மிக்கதாக இருப்பதால்தான் அதை நம்பாமல் எல்லாத் தொழிற்சாலைகளுமே சொந்தமாக பஸ்கள் விடுகின்றன. இதைப் பற்றி நான் ஒரு பொதுஜனத் தொடர்பு அதிகாரியிடம் கேட்டபோது அவர் மிகவும் விவரமாக அவர்களிடம் மொத்தம் எவ்வளவு பஸ்கள் உள்ளன; அவற்றில் ஓடும் நிலைமையில் உள்ளவை எத்தனை; எவ்வளவு பஸ் ஊழியர்கள் வேலை பார்க்கின்றனர் என்பன போன்ற எல்லா விஷயங்களையும் சொன்னார்.

இன்னொரு தொழிற்சாலையின் அதிகாரியோ ''பஸ்களின் எண்ணிக்கையை எழுத வேண்டாம். எங்களிடம் நிறைய பஸ்கள் இருந்தாலும்கூடத் தொழிலாளர்களின் எண்ணிக்கையைப் பார்க்கும்போது இது குறைவு!'' என்றார். எண்ணிக்கை குறைவு என்பதில் அவர் அடைந்த உணர்ச்சியை விட அது வெளியில் தெரிந்துவிடக் கூடாது என்பதில் செய்த எச்சரிக்கைதான் அதிகமாயிருந்தது.

ஒரு தொழிற்சாலையில் தொழிலாளர்களுடன் நான் பேசுவதையே சாமர்த்தியமாகத் தடுத்து விட்டார்கள். இன்னொரு தொழிற்சாலையில் ஒரு வயதான தொழிலாளருடன் பேசிக் கொண்டிருக்கையில் அவர் ஆவேசத்துடன் கூறினார்: ''எழுதுங்கள் சார்! படிச்சுட்டு இவங்க வண்டவாளத்தை எல்லோரும் தெரிஞ்சுக்கட்டும்!'' என்றார். அவருடைய கோபத்துக்கான காரணங்களையும் கூறினார். எல்லாம் சொந்த விஷயங்கள்தாம். அவர் சேர்ந்து பல வருடங்களுக்குப் பின் சேர்ந்த இளைஞரான மேலதிகாரியொருவர் அவரை மதிக்காமல் இருப்பது; கையைத் தட்டிக் கூப்பிடுவது போன்ற மனக் கடுப்புகள். தொழிற்சாலை ஆரம்பித்த புதிதில் இருந்த

அயல்நாட்டு அதிகாரிகள் மிகவும் நல்லவர்களாக இருந்தார்களாம். நம் நாட்டவர்கள் — அதிலும் தென்னாட்டவர்தாம் மோசமாம்!

"ஏதாச்சும் சொன்னால் கம்யூனிஸ்ட் என்கிறாங்க ஸார். நான் என்ன கம்யூனிஸ்ட்டா? கம்யூனிஸ்டுன்னா இங்கேயா இருப்பேன்? எப்பவோ சிறைக்குப் போயிருக்க மாட்டேனா?" என்று ஆவேசத்துடன் கேட்டார். ஒரு சந்தர்ப்பத்தில் அவர் கண்களில் கண்ணீர் கூட நிறைந்து விட்டது. "சார்! நான் கடவுளை எப்பவும் மறக்கலே. யாருக்கும் கெடுதல் நெனைக்கலே. எனக்குப் பெரிசா ஒண்ணும் வேண்டாம். மனசை நோகடிக்காமக் கொஞ்சம் கருணை காட்டினாப் போதும்!" என்றார்.

நான் அவருக்கு ஆறுதல் கூறும் வகையில் "பிரைவேட் கம்பெனியா இருந்தால் ஒரே முதலாளி — அவர் நெனைச்சதைச் செய்யலாம். சம்பளத்தைக் கூட்டலாம். இங்கே எல்லாம் ஓர் ஒழுங்குப் பிரகாரம் நியாயமான முறையில் தான் வரும். நீங்க நம்பிக்கையை இழக்காமல் இருந்தா நிச்சயமா ஒரு நாள் நல்லது நடக்கும்" என்று சொல்லித் தேற்றிப் பார்த்தேன். "நீங்க இதையெல்லாம் பத்திப் பத்திரிகையில் போட்டு ஏதாவது வழி பண்ணுங்க சார்!" என்றார் அவர்.

எல்லாத் தொழிற்சாலைகளிலுமே அநேகமாக நாட்டின் எல்லா முக்கிய மொழிகளைப் பேசுபவர்களும் வேலை செய்கிறார்கள் என்றாலும் தமிழும் மலையாளமும் அதிகமாகக் கேட்கின்றன. ஒரு தொழிற்சாலையில் என்னைச் சுற்றிக் காட்டிக் கொண்டிருந்தவர் "இங்கு எல்லாருமே உங்கள் பாஷை பேசுவார்கள்! மற்ற மொழிக்காரர்கள் கூட சர்வசாதாரணமாகத் தமிழ் பேசுவார்கள்" என்றார். அவர் என்ன உணர்ச்சியுடன் அதைக் கூறினார் என்பதை நான் அறிய முயலவில்லை.

தொழிற்சாலைகளின் ஒவ்வொரு பகுதியிலும் வெள்ளிக் கிழமைகளில் பூஜை நடக்கிறது. அந்தந்தப் பகுதியைச் சேர்ந்தவர்கள் பணம் செலவு செய்து நைவேத்தியத்தைப் பகிர்ந்து கொள்கிறார்கள். எந்த விஞ்ஞானம் என்ன செய்யும்?

தொழிலாளர்களுக்குச் செய்து தரப்பட்டிருக்கும் வசதிகள் தொழிலகச் சட்டத்துக்குட்பட்டு எல்லாத் தொழிற்சாலைகளிலும் அநேகமாக ஒன்றுபோலவே இருக்கின்றன. குடியிருப்பு, மருத்துவமனை, போக்குவரத்து வசதி,









1. பெங்களூர் லால்பாக் கண்ணாடி மாளிகை.
2. பெங்களூர் அரண்மனை.
3. விதான்சௌதா.
4. நகர மார்க்கெட்.

## வளம் கொழிக்க மின்விசை... 1



# எண்ணூர் வழங்கும் மின்விசை இருட்துயர் களைந்து இன்பகீதம் எழுப்பும்!

தமிழ் நாட்டில் பருவ மழை தவறும்பொழுது அதனால் பாதிக்கப்படுவது நெல்வயல்கள், தோட்டங்கள் மட்டுமல்ல. மின்சாரவெட்டுகளும்,வேலை ஓய்வும் தொழிற் தேக்கமும் ஆண்டுதோறும் நிகழும் ஒரு துயரக்கதையாகிவிட்டது.

### வளம் கொழிக்க மின்விசை

இப்போது வடசென்னையில் உள்ள எண்ணூரில் தமிழ்நாடு மாநில மின் வாரியத்தால் அமைக்கப்பட்டு வரும் 450 MW அனல் மின் நிலையம் இத்துயர் நிலைகளைந்து வெகு சீக்கிரம் மகிழ்ச்சிகரமான மாறுதலை தோற்றுவிக்கும்.

ஆண்டுதோறும் 50,000 புதிய பம்ப் செட்டுகள் இயங்குவதற்குத் தேவையான மின்விசையை அளித்து தரிசு நிலங்களைத் தரமிகு நிலங்களாக மாற்றும்...பெருகி வரும் தொழில்வளம் மேலும் ஓங்குவதற்குத் தேவையான மின்சக்தியையளிக்கும். நகரில் ஒளி மங்கலாக எரியும் விளக்குகளைப் பிரகாசமிக்கதாகச் செய்யும்.

தவிர இப்புதிய மின்சக்தி தமிழ்நாடு, பருவ மழையை நம்பிக்கொண்டிருக்கும் நிலையை குறைத்து மின்விசை உற்பத்தியில் தன்னிறைவுக்கு வழி கோலும்.

## மின் நிலையமும் அதன் ஆற்றலும்

எண்ணூர் அனல் மின்நிலையம் அதன் முதலாவது கட்டத்தில் இரண்டு 110 MW பாய்லர்களையும், இரண்டு 60 MW பாய்லர்களையும் பெற்றிருக்கும். திருச்சியிலுள்ள பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் ஹை பிரஷர் பாய்லர் தொழிற்சாலை தனது தொழிலகத்திலேயே உருவாக்கப்பட்ட 60 MW பாய்லர்களை வழங்கியுள்ளது. இதனால் ஏறத்தாழ 6.6 கோடி ரூபாய்கள் அந்நியச் செலாவணி மிச்சப்பட்டுள்ளன. இதில் பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் ஹைதராபாத் தொழிற்சாலையினால் தயாரிக்கப்பட்ட ரூ. 2.8 கோடி பெறுமானமுள்ள டர்பைன்கள் சேர்க்கப்படவில்லை.

மற்ற இரண்டு 110 MW பாய்லர்களும் செக்கோஸ்லோவாகியாவினால் அளிக்கப்பட்டவை. இதில் கூட திருச்சி தொழிற்சாலை தயாரிப்புகளின் விலை மதிப்பு ரூ. 2.5 கோடியாகும்.




அடுத்ததாக நிறுவப்போகும் ஐந்தாவது 110 MW பாய்லர் பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் நிறுவனத்தினாலேயே முழுமையாக உருவாக்கப்படும். இதன் மதிப்பீடு சுமார் ரூ. 5.3 கோடியாகும்.

மொத்தத்தில் எண்ணூர் மின்நிலையத்தின் முதலாவது கட்டத்தின் மதிப்பு ரூ. 45 கோடியாகும். இதில் பாய்லர்கள், டர்பைன்கள் மற்றும் துணைக் கருவிகள் தயாரித்து அளித்த வகையில் பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் பங்கு சுமார் ரூ. 15 கோடி.

இடையறா உழைப்பும், வியக்கத்தக்க பொறியியல் வல்லமையும் பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸின் பங்கினை ஒரு தலைசிறந்த வெற்றியாக ஆக்கி உள்ளன.

## குறுகியகாலத்தில் மிகப்பெரும் சாதனை

ஒவ்வொரு 60 MW பாய்லருக்குத் தேவையான பல்வேறு இரும்பு,எஃகு அங்கங்களைத் தயாரிக்க 30,000 வரைபடங்கள், 400,000 மணிநேர உழைப்பு மொத்தம் 3000 டன் எடையுள்ள கட்டுமானங்கள், வால்வுகள், விசிறிகள் மற்றும் துணைசாதனங்கள் இவைகளனைத்தும் அனல் மின்நிலையம் கட்டிடத்திற்கு கொண்டு சேர்த்து நிர்மாணம் செய்ய எடுத்துக்கொண்ட காலமோ 15 மாதங்கள்தான்!

ஒவ்வொரு பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் 60 MW பாய்லரும் நாளொன்றுக்கு 1000 டன் நிலக்கரியை உபயோகித்து மணியொன்றுக்கு 260,000 லிட்டர் தண்ணீரை மின்சக்தியாகமாற்றும். பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் ஹை பிரஷர் பாய்லர்களை உபயோகிக்கும் இதர அனல் மின்நிலையங்கள்:
ஹர்துவாகஞ்-டில்லி - பதார்பூர் - கொத்தகுடம்-ஓப்ரா - பட்ரட்டு - நாம்ருப் - பாடிண்டா. இதன் மொத்த மதிப்பீடு சுமார் ரூ. 60 கோடியாகும்.

## வற்றாது வழங்கும் மூலதனம்

1971-ல் இந்தத் திட்டங்கள் செயல்படத் தொடங்கும்போது, திருச்சி ஹை பிரஷர் பாய்லர் தொழிற்சாலை அதன் ஆரம்ப முதலீட்டை ஈடு செய்வதோடல்லாமல் தேசிய வருமானம் பெருமளவு பெருக அதன் பங்கினைச் செலுத்தும் நிலையை எய்தும். அதுமட்டுமல்ல, உலக நாடுகளில் மின்நிலையங்கள் அமைக்க உதவுவதன் மூலம் அந்நியச் செலாவணி இன்னும் அதிக அளவில் கிடைக்கச்செய்யும்.

வளம் கொழிக்க மின்சக்தி
உற்பத்திப்பணியில் . . .

# BHEL

பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட்
ஹை பிரஷர் பாய்லர் தொழிற்சாலை,
திருச்சிராப்பள்ளி-14



## கடன் மொழி

கடனோடு காலையில் எழுவதைவிடப் பட்டினியோடு இரவில் படுப்பது மேல். - பிராங்க்ளின்

நண்பனுக்குக் கடன் கொடுத்தால் கடனுக்குக் கடனும் போய்விடும்; நண்பனுக்கு நண்பனும் போய்விடுவான். -ஷேக்ஸ்பியர்

பொன்மொழிகளைக் கடன் வாங்கி
அனுப்பியவர்: அரவன்

சாப்பாட்டு விடுதி, மார்க்கெட், பள்ளிக் கூடங்கள், சிறு குழந்தைகள் பராமரிப்பு நிலையங்கள், பொழுதுபோக்கு வசதிகள், நூலகங்கள், தொழிலாளர்களுக்கு இலவசச் சீருடைகள், கடினத் தொழில் செய்பவர்களுக்கு இலவசப் பால், சத்து மாத்திரைகள் வழங்குதல் முதலிய வசதிகள் எல்லாத் தொழிற்சாலைகளிலும் இருக்கின்றன.

ஆனால் இந்த வசதிகள் செயல்படும் விதம் தொழிற்சாலைக்குத் தொழிற்சாலை கொஞ்சம் மாறுபடுகிறது. ஒரு தொழிற்சாலையில் ஒரு வசதி சிறப்பாக இருந்தால் இன்னொன்றில் இன்னொரு வசதி சிறப்பாக இருக்கிறது. ஆனால் பஸ் போக்குவரத்தும், குடியிருப்பு வசதியும் எந்தத் தொழிற்சாலையிலும் அவற்றின் தொழிலாளர்களின் எண்ணிக்கையைப் பார்க்கையில் போதுமானதாக இல்லை. உணவு விடுதியில் எல்லாம் மிகவும் மலிவு விலையில் கிடைக்கின்றன என்பது உண்மைதான். ஆனால், தொழிலாளர்கள் வேறு வழியில்லாததால்தான் அவற்றைச் சாப்பிடுகிறார்களோ என்றும் தோன்றுகிறது. அல்லது அவர்களுக்கு அது பழகிப் போயிருக்கவும் கூடும்.

ஒரு தொழிற்சாலையில் மூன்று தொழிலாளர் சங்கங்கள் இருக்கின்றன. 'இது ஏன்? நிர்வாகத்தில் பல தொழிலாளர்களுக்குத் திருப்தியில்லையா?' என்று அறிய முயன்றேன். தொழிலாளர்களிடையே ஒற்றுமை இல்லாததுதான் இப்படிப் பல சங்கங்கள் எழக் காரணமென்றும், ஒற்றுமை இல்லாததற்குக் காரணம், ஒருவருடைய கோரிக்கை மற்றவருக்கு நியாயமாகப் படாததுதான்– அதாவது தொழிலாளரிடையே அபிப்பிராய பேதங்கள் இருப்பதுதான்' என்கிறார்கள்.

பார்வை இழந்த தொழிலாளர் ஒருவர் கூறினார்: ''எங்களுக்குத் தனியாக ஒரு சங்கம் ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால் நான் எந்தச் சங்கத்திலும் உறுப்பினன் அல்லன். எந்தச் சங்கமும் எங்களுக்கு ஒரு நன்மையையும் செய்ய முடியாதென்பதை நான் கண்டு கொண்டு விட்டேன். 'எங்களுக்கு வேலை கொடுத்ததே பெரிய சலுகை; எந்த விதமான விசேஷ சலுகையும் தர முடியாது' என்று நிர்வாகத்தினர் கூறுகிறார்கள். எங்கள் குறையைப் பற்றி அவர்கள் நினைத்துப் பார்ப்பதேயில்லை. சங்கம் ஆரம்பிப்பவர்களோ, தமக்கும் தங்கள் நண்பர்களுக்கும் சில வசதிகளுக்காக மட்டும் பாடுபடுகிறார்கள்.''

'ஓவர்டைம் வொர்க்' என்று ஒன்று. வேலை மிகுந்திருந்தால் எட்டு மணி நேரத்துக்குப் பின்னர் வேலை செய்து அதை முடிக்க முயல வேண்டும். ஒரு நாளுக்கு உண்டான எட்டு மணி நேரத்துக்குமேல் அதிகப்படி ஒவ்வொரு மணி நேரத்துக்கும் தொழிலாளரின் சம்பள விகிதத்தைப் பொறுத்துப் பணம் தரப்படும். பெரும்பாலான அரசாங்கத் துறைகளில் இது ஒரு கேலிக்கூத்தாகவே இருக்கிறது. குறிப்பிட்ட நேரத்தில் வேண்டுமென்றே இழுத்தடித்து விட்டுப் பணத்துக்காக அதிகப்படி நேரம் வேலை செய்வது – அதாவது தொழிற்சாலையில் இருப்பது. சில அதிகாரிகள் தம் மேலதிகாரிகளின் பாராட்டைப் பெறுவதற்காகத் தம் கீழுள்ள தொழிலாளர்களை 'ஓவர்டைம்' வேலை செய்யச் சொல்லிக் கட்டுப்படுத்துவது – அதாவது அத்தனை கஷ்டப்பட்டு வேலையை முடிக்கிறதாக ஐதீகம்!

'போனஸ்' முதலியன தொழிற்சாலைக்குத் தொழிற்சாலை இலாபத்தைப் பொறுத்துக் கொஞ்சம் வேறுபடுகிறது. அதைத் தவிர சில தொழிற்சாலைகளில் குறிப்பிட்ட நேரத்துக்குள் அதிக வேலை செய்பவர்களுக்கு ஊக்கப் பணம், சிறந்த யோசனை சொல்பவர்களுக்குப் பரிசு, மரண நிதி, கஷ்ட கால உதவி நிதி முதலியனவும் இருக்கின்றன.

டெலிஃபோன் தொழிற்சாலையின் பொது நுனைத் தொடர்பு அதிகாரியுடன் டெலிஃபோனில் தொடர்பு கொள்ளுவது மிகவும் சிரமமாக இருந்தது. சில மாதங்களுக்கு முன்பு வரை அவர்களுக்கு வெளித் தொடர்புக்கு ஒரே ஒரு 'லைன்'தான் இருந்ததாம்!

எல்லாத் தொழிற்சாலைகளிலும் பத்திரிகை நடத்துகிறார்கள். ஐ. டி. ஐ.யின் முத்திங்கள் இதழ் மிகவும் சிறப்பாக இருக்கிறது. சிறந்த புகைப்படங்கள், சிறந்த கட்டுரைகள், கவிதைகள், கதைகள் முதலியன இருக்கின்றன. ஆங்கிலம், கன்னடம், ஹிந்தி, மலையாளம், தமிழ் ஆகிய ஐந்து மொழிப் பகுதிகள் இருக்கின்றன. வேண்டுமென்றே விஞ்ஞானக் கட்டுரைகளைத் தவிர்க்கிறார்களாம். ஒவ்வொரு இதழிலும் ஒரு விஞ்ஞானக் கட்டுரைக்கு மேல் இருப்பதில்லை. எல்லாத் தொழிற்சாலைகளிலும் எல்லா மொழி மன்றங்களும் உள்ளன. நாடக விழாக்கள் போட்டிகள், பொதுக்கூட்டங்கள் முதலியன நடக்கின்றன.

ஒரு தொழிற்சாலைக்கு அனுமதி கேட்டு எழுதி, நான்கே நாட்களில் பதில் வந்து விட்டது. அத்தொழிற்சாலையின் சிறப்புக்களைப் பற்றிய ஆங்கில 'ரெடி-மேட்' கட்டுரை ஒன்றை அனுப்பி யிருந்தார்கள். ''எங்கள் வாசகர்கள் இதைப் படித்து விட்டுத் திருப்தியடைந்துவிட மாட்டார்கள். உங்கள் தொழிற்சாலையின் சூழ்நிலைகள், தொழிலாளர்களின் மனநிலைகள், உங்கள் தயாரிப்புக்களைப் பற்றிய உண்மை விவரங்கள் யாவையும் அறிய விரும்புவார்கள். நான் நேரில் வந்து அவைகளைத் தெரிந்துகொள்ள வேண்டும். புகைப்படங்களும் தேவை'' என்று அவர்களுக்கு எழுதினேன். பதிலில்லை. ஆகவே அந்தத் தொழிற்சாலையைப் பற்றி எழுதவில்லை.



# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

## "இதோ யுத்தம்!"

**வ**ந்தியத்தேவன், "உறையிலிருந்து கத்தியை எடுங்கள்!" என்று சொன்ன உடனே, இளவரசர், "இதோ எடுத்து விட்டேன்!" என்று பட்டாக் கத்தியை உருவி எடுத்தார். அதே சமயத்தில் வந்தியத்தேவனும் உறையிலிருந்து கத்தியை எடுத்தான். அவை பிரம்மாண்டமான ராட்சதக் கத்திகள். அநுராதபுரத்துப் போதி விருட்சத்தின் அருகில் குதிரைகளுடன் வந்து நின்றவர்கள் அந்தக் கத்திகளையும் கொடுத்து விட்டுச் சென்றார்கள்.

இளவரசர் குதிரையிலிருந்து கீழே குதித்து, "வா, இறங்கி! உன்னுடைய அதிகப் பிரசங்கத்தை என்னால் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது! இங்கேயே ஒரு கை பார்த்துவிட்டுத்தான் போகவேண்டும்!" என்று கடுமையாகக் கூறியதும், வந்தியத்தேவன் திகைத்துப் போனான். இது விளையாட்டா, வினையா என்று அவனுக்குத் தெரியவில்லை. எனினும், இளவரசர் குதிரையிலிருந்து பூமியில் இறங்கி விட்டபடியால் அவனும் இறங்க வேண்டியதாயிற்று.

"என்ன ஐயா ! ஏன் தயங்குகிறீர்? நேற்றிரவு என்னை நீர் அவமானப்படுத்தப் பார்த்தீர் அல்லவா ? உம்முடைய பாட்டன் வீட்டு அரண்மனை முற்றத்தில் என் பாட்டன்மார்கள் வந்து காத்திருந்தார்கள் என்று சொல்லவில்லையா? அவர்களுடைய குடை, சிவிகை ஆகியவற்றைப் புலவர்கள் தட்டிக் கொண்டு போவதைப் பார்த்துப் பொருமினார்கள் என்று கூறவில்லையா? அதை நினைத்துப் பார்க்கப் பார்க்க எனக்குப் பொறுக்க முடியவில்லை. இரண்டில் ஒன்று தீர்த்துக் கட்டி விட்டுத்தான் இங்கிருந்து புறப்பட வேண்டும்!" என்று சொல்லிக் கொண்டு இளவரசர் இரண்டு கைகளினாலும் தமது பட்டாக் கத்தியின் அடியைப் பிடித்துச் சுழற்றிக் கொண்டே வந்தியத்தேவனிடம் அணுகினார்.

ஆம்; அது சாதாரண கத்தி அன்று என்பதாகச் சொன்னோமே? எவ்வளவு பலசாலியானாலும் அதை ஒரு கையினால் தூக்கி நிறுத்துவதே பெரிய காரியம். இரண்டு கைகளினாலும் பிடித்துக்கொண்டால்தான் கத்தியைச் சுழற்றவும் எதிரியைத் தாக்கவும் முடியும்.

**இ**ளவரசர் அவ்விதம் இரு கைகளினாலும் கத்தியைச் சுழற்றியபோது அவரைப் பார்த்தால் அரண்மனையில் சுக போகங்களில் வளர்ந்த கோமள சுபாவம் படைத்த இராஜ குமாரனாகத் தோன்றவில்லை. பழைய காலத்து வீராதி வீரர்களான பீமனையும் அர்ச்சுனனையும் அரவானையும் அபிமன்யுவையும் போல் விளங்கினார். இன்னும், திருமேனியில் தொண்ணூற்றாறு புண் சுமந்த விஜயாலய சோழரையும் யானை மேல் துஞ்சியவரான இராஜாதித்த தேவரையும் ஒத்து, அவர்களுடைய வழியில் வந்தவர் தாம் என்பதை ஞாபகப்படுத்துமாறு வீர கம்பீரத் தோற்றத்துடன் திகழ்ந்தார்.

வந்தியத்தேவனும் இரண்டு கைகளினாலும் கத்தியைப் பிடித்துச் சுழற்றத் தொடங்கினான். ஆரம்பத்தில் அவனுடைய மனத்தில் குழப்பமும் தயக்கமும் குடிகொண்டிருந்தன. போகப் போக, மனம் திடப்பட்டது. வீர வெறி மிகுந்தது. எதிரி தன் போற்றுதலுக்கு உரிய இளவரசர் என்பது மறந்தது. எதற்காக இந்தச் சண்டை என்னும் எண்ணமும் மறந்தது. எதிரியின் கையில் சுழலும் கத்தி ஒன்றே

அவனது கண்முன் நின்றது. அக் கத்தியினுல் தாக்கப்படாமல் தான் தப்புவது எப்படி, அதைத் தட்டி எறிந்துவிட்டு எதிரியைக் காயப்படுத்து வது எப்படி என்ற ஒரே விஷயத்தில் அவன் கவனமெல்லாம் பதிந்திருந்தது.

கத்திகள் சுழலும் வேகமும் அவை ஒன்றின் மேல் ஒன்று மோதி 'டணர்' 'டணர்' என்ற ஒலியை எழுப்பும் வேகமும் முதலில் சவுக்க காலத்தில் தொடங்கி, மத்தியம காலத்தைத் தாண்டி, துரித காலத்துக்கு வந்தன.

இளவரசருடைய காரியம் முதலில் ஆழ்வார்க்கடியானுக்கு விளங்கவில்லே. ஆனுலும், அதில் ஏதோ ஒரு நோக்கம் இருக்க வேண்டும் என்று அவன் கருதி ஞன். வருகிறவர்களைத் தடுத்து நிறுத்து வதற்கும், அவர்கள் இன்னர் என்று தெரிந்து கொண்டு அதற்கேற்ப நாம் செய்யவேண்டியதை நிர்ணயிப்பதற்கும் அது ஓர் உபாயமாயிருக்கலாம். ஆகவே அந்த இரு வீரர்களுடைய குதிரைகளை யும் சாலே மத்தியில் குறுக்கே நிற்கும்படி விட்டு அவற்றின் தலேக் கயிறுகளைப் பிடித்துக் கொண்டு ஆழ்வார்க்கடியான் காத்திருந்தான்.

**சா**லேயில் எதிர்ப்புறமிருந்து வந்து கொண்டிருந்த குதிரை வீரர்கள் நெருங்கி வந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் புலிக் கொடி பறந்து கொண்டிருந்ததைப் பார்த்ததும் ஆழ் வார்க்கடியானுடைய கவலே நீங் கியது. வருகிறவர்கள் நம்மவர்கள் தான். ஆனுல் யாராயிருக்கும்?

அவர்களில் முன்னுல் வந்த கட்டியக் காரர்கள் அந்த விஷயத்தைப் பறை யறைந்து அறிவித்தார்கள்.

''ஈழத்துப் போரில் மகிந்தனைப் புறங்கண்ட இலங்கைப் படைகளின் சேநாதிபதி — வைகையாற்றுப் போரில் வீ ர பா ண் டி ய ன் தலே கொண்ட கொடும்பாளூர்ப் பெரிய வேளார் — பூதி விக்ரெமகேசரி மகாராஜா விஜய மாகிருர் ! பராக்!'' என்று ஓர் இடி முழக்கக் குரல் ஒலித்தது.

''பல்லவ குலத் தோன்றல்—வைகைப் போரில் வீர பாண்டியன் தலே கொண்ட வீராதி வீரர்—வடபெண்ணேப் போரில் வேங்கிப் படையை முறியடித்த பராக் கிரம பூபதி — பார்த்திபேந்திர வர்மர் விஜயமாகிருர்! பராக்!'' என்று இன் ெனாரு இடி முழக்கக் குரல் ஒலித்தது.

இப்படிக் கட்டியம் கூறியவர்களுக்குப் பின்னுல் சுமார் முப்பது குதிரை வீரர்கள் வந்தார்கள். அவர்களுள் நடுநாயகமாகக் கம்பீரமான வெள்ளேப்



புரவிகளின் மீது சேனாதிபதி பெரிய வேளாரும் பார்த்திபேந்திரனும் வீற்றிருந்தார்கள்.

குதிரை வீரர்களைத் தொடர்ந்து அம்பாரியுடன் ஒரு பெரிய யானை வந்தது.

இன்னும் சிறிது தூரத்துக்குப் பின்னால் வந்த காலாட்படை புழுதிப் படலத்தில் மங்கலடைந்து காணப்பட்டது.

முன்னால் வந்த குதிரை வீரர்கள் வழியில் ஏற்பட்ட தடையினால் அதிருப்தி அடைந்தவர்களாகத் தோன்றினார்கள்.

''யார் அது?'' ''விலகு!'' ''வழி விடு!'' என்ற சில குரல்களும் கேட்டன.

பின்னர் அக்கூட்டத்தில் 'கசமுச கசமுச' என்ற இரகசியப் பேச்சுவார்த்தைகளும், ''ஓஹோ!'' ''ஆஹா!'' என்ற வியப்பொலிகளும் எழுந்தன.

வீரர்கள் குதிரைகள் மீதிருந்து குதித்தார்கள். கத்திச் சண்டை போட்டவர்களைச் சூழ்ந்து கொண்டு நின்றார்கள்.

பூதி விக்கிரமகேசரியும் பார்த்திபேந்திரனுங்கூடக் குதிரை மீதிருந்து பூமியில் இறங்கி விட்டார்கள். வீரர்களின் முன்னணியில் வந்து நின்றார்கள்.

பார்த்திபேந்திரன் பட படத்தான். விக்கிரம கேசரியிடம், ''பார்த்தீர்களா? வல்லத்தானைப் பற்றி நான் சொன்னது உண்மையா, இல்லையா? சுத்த அதிகப் பிரசங்கி! இளவரசரிடமே தன் கை வரிசையைக் காட்டத் தொடங்கி விட்டான். இதை நாம் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதா?....'' என்று தன் கையிலிருந்த கத்தியை ஓங்கினான்.

பூதி விக்கிரமகேசரி அவனுடைய கையைப் பிடித்துத் தடுத்தார்.

''கொஞ்சம் பொறுங்கள், பார்க்கலாம்! என்ன அற்புதமான கத்திப் போர்! இந்த மாதிரி பார்த்து எத்தனையோ நாள் ஆயிற்று!'' என்றார்.

சற்றுப் பின்னால் வந்த காலாள் வீரர்கள் — சுமார் முந்நூறு பேர்—அவர்களும் வந்து சேர்ந்தார்கள். வட்ட வடிவமாக நின்று வேடிக்கை பார்க்கலானார்கள்.

இதற்குள் யானை மேல் அம்பாரியிலிருந்து ஒரு பெண் கீழே இறங்கினாள். குதிரைகளுக்கும் வீரர்களுக்கும் இடையிடையே புகுந்து வந்து அவள் வேடிக்கை பார்த்த வட்டத்தின் முன்னணியில் நின்று கொண்டாள்.

அவளுடைய முகத்தில் அச்சமயம் குடிகொண்டிருந்த கிளர்ச்சியை இப்படியென்று சொல்ல முடியாது. கத்திகள்



அங்கு மிங்கும் பாய்ந்த போது அவளுடைய கண் விழிகளும் பாய்ந்தன. போரிட்டவர்கள் அப்படியும் இப்படியும் குதித்த போது அவளையறியாமல் அவளுடைய இடை துவண்டு அப்படியும் இப்படியும் ஆடியது. சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் தன் கூந்தலில் செருகியிருந்த காம்புடன் கூடிய நீலோத்பல மலரை எடுத்துக் கொண்டாள். அதை இப்படியும் அப்படியும் சுற்றிச் சுழற்றத் தொடங்கினாள். கத்திகள் சுழன்ற தாளத்துக்கு இசைய அவளுடைய கையிலிருந்த பூவின் தண்டு சுழன்றது. — இந்தப் பெண் யார் என்று வாசகர்களுக்கு நாம் சொல்ல வேண்டியதில்லை. ஆம்; பூங்குழலியை அவர்கள் மறந்திருக்க முடியாதல்லவா ?

சிறிது நேரம் வரையில் அவளுடைய முகத்துக்கு எதிரே இளவரசர் முகம் தெரியும்படியாக அவ்வீரர்கள் நின்று போரிட்டனர். கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து பாதி வட்டம் சுற்றி வந்தனர். கடைசியில் வந்தியத் தேவனுடைய முகம் பூங்குழலியின் முகத்துக்கு எதிராக வந்தது. இடையிடையே வந்தியத்தேவனுடைய கண்கள் சுற்றிலும் பெருகி வந்த வீரர் கூட்டத்தைக் கவனித்து வந்தன. அப்போது பூங்குழலியையும் பார்த்து விட்டன. திடீரென்று அந்தப் பெண்ணைப் பார்த்த வியப்பினால் ஒரு கணம் அவன் கவனம் சிதறியது. அந்த ஒரு கண நேரமே இளவரசருக்குப் போதுமானதா யிருந்தது. வந்தியத்தேவனுடைய கத்தியின் மீது தேவேந்திரனுடைய வஜ்ராயுதத்தைப் போல் இளவரசரின் கத்தி தாக்கியது. வாணர் குல வீரன் தடுமாறினான். அவனுடைய கைப் பிடியிலிருந்து நழுவிப் பட்டாக் கத்தி கீழே விழுந்தது.

சுற்றிலும் கூடியிருந்தவர்கள் அச்சமயம் எழுப்பிய ஆரவாரம் அலைகடலின் ஓசையை ஒத்திருந்தது. அவ்வளவு ஆரவாரத்தையும் மீறிக் கொண்டு ஓர் இளம் பெண்ணின் உற்சாகமான சிரிப்பொலி கேட்டது.

வந்தியத் தேவன் கீழே விழுந்த கத்தியை மீண்டும் எடுப்பதற்குப் பிரயத்தனம் செய்தான்.

இதற்குள் இளவரசர் பாய்ந்துசென்று அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார்.

''நீர் என்னுடைய வாளுக்குத் தோற்கவில்லை. வாளுக்கு வாள் சமமான லாகவத்துடன் போரிட்டீர். ஆனால் ஒரு பெண்ணின் கண் வாளுக்குத் தோற்றீர் ! இதில் அவமானம் ஒன்றுமில்லை. எல்லாருக்கும் நேரக் கூடியதுதான் !'' என்றார்.

வந்தியத்தேவன் அதற்குள் ஏதோ சமாதானம் சொல்ல ஆரம்பித்தான். அதற்குள் சேனாதிபதி பூதி விக்கிரம கேசரியும் பார்த்திபேந்திரனும் அவர்களை நெருங்கி வந்து விட்டார்கள்.

''இளவரசே! இந்தப் பிள்ளையை நான்தான் தங்களிடம் அனுப்பினேன்! இவன் ஏதாவது தவறாக நடந்து கொண்டு விட்டானா? கொஞ்ச நேரம் கதி கலங்கிப் போய்விட்டோம் !'' என்றார்.

''ஆம், தளபதி! இவருடைய ஏச்சை என்னால் பொறுக்கமுடியவில்லை. 'இலங்கையில் யுத்தம் நடக்கிறது என்றார்களே யுத்தம் எங்கே, யுத்தம் எங்கே?' என்று கேட்டு என்னைத் துளைத்துவிட்டார். 'இதோ யுத்தம்!' என்று காட்டினேன்!''

இவ்வாறு இளவரசர் கூறியதும் சுற்றி யிருந்தவர்கள் அனைவரும் மறுபடியும் ஆரவாரம் செய்தார்கள்.

சேனாதிபதி வந்தியத்தேவனுடைய அருகில் வந்து அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார். ''அப்பனே! இந்தமாதிரி கத்திச் சண்டை பார்த்து எத்தனையோ நாள் ஆயிற்று! இளவரசருக்குச் சரியான துணைவன் நீ! சிலசமயம் அவருக்கு இப்படித்தான் திமுர் திமுர் என்று தோள் தினவு எடுக்கும். 'குஞ்சர மல்லன்' என்று பெயர் பெற்ற பராந்தகச் சக்கரவர்த்தியின் வம்சத்தில் பிறந்தவர் அல்லவா? அவருடன் நேருக்கு நேர் நின்று சண்டை பிடிக்க முடியாதவர்கள் அவருடன் நெடுநாள் சிநேகமாக இருக்க முடியாது!'' என்றார்.

இதற்குள் இளவரசர் பார்த்திபேந்திர பல்லவரின் சமீபமாகச் சென்று, ''ஐயா! தாங்கள் என்னைத் தேடி வந்திருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்டேன். தங்களைச் சந்திப்பதற்காகவே விரைந்து வந்தேன். காஞ்சியில் தமையனார் சௌக்கியமா? என் பாட்டனார் எப்படி இருக்கிறார்?'' என்று கேட்டார்.

''தமையனாரும் பாட்டனாரும் தங்களுக்கு மிகவும் முக்கியமான செய்தி அனுப்பியிருக்கிறார்கள். இலங்கைக்கு வந்து தங்களைக் கண்டுபிடிப்பதற்கே நாலைந்து தினங்கள் ஆகிவிட்டன. இனி ஒரு கணமும் தாமதிப்பதற்கில்லை'' என்று பார்த்திபேந்திரன் கூறுவதற்குள் இளவரசர், ''முக்கிய காரியமாக இல்லாவிட்டால் தாங்களே புறப்பட்டு வருவீர்களா? இனி ஒரு கணமும் தாமதிக்க வேண்டியதில்லை. இப்போதே செய்தியைத் தெரிவிக்க வேணும்'' என்றார்.

இச்சமயம் அவர்கள் சமீபத்தில் வந்த சேனாபதி பெரிய வேளார் "நடுச்சாலையில் இத்தனை பேருக்கு நடுவிலே ஒன்றும் பேச முடியாது. அதோ ஒரு பாழும் மண்டபம் தெரிகிறதே! அங்கே போகலாம்! நல்ல வேளையாக இந்த இலங்கையில் பாழும் மண்டபத்துக்குக் குறைவு கிடையாது!" என்றார்.

சாலைக்கு அப்பால் கொஞ்ச தூரத்திலிருந்த பாழும் மண்டபத்தை நோக்கி அனைவரும் போனார்கள்.

## நாற்பதாம் அத்தியாயம்

# மந்திராலோசனை

போகும்போது வந்தியத்தேவன் ஆழ்வார்க்கடியானை நெருங்கி, "இது என்ன, இளவரசர் இப்படிச் செய்கிறார்? அன்று திடீர் என்று குத்துச் சண்டை போட்டார்; இன்று கத்திச் சண்டையில் இறங்கினார். சொல்லி விட்டாவது சண்டையை ஆரம்பிக்கக் கூடாதா! இளவரசருடைய சிநேகம் மிகவும் ஆபத்தாக இருக்கும் போலிருக்கிறதே!" என்றான்.

இளவரசர் இதைக் கேட்டுக் கொண்டே அவர்கள் பக்கத்தில் வந்து விட்டார்.

"ஆம், ஐயா! என்னுடைய சிநேகம் மிகவும் ஆபத்தானதுதான். நேற்றிரவே அது உமக்குத் தெரிந்திருக்குமே? ஆபத்துக்கு உள்ளாகாமல் இருக்க வேண்டுமானால் நான் இருக்குமிடத்திலிருந்து குறைந்தது பத்து காத தூரத்தில் இருக்க வேண்டும்!" என்றார்.

"இளவரசே! அதற்காக நான் சொல்லவில்லை. தங்கள் பக்கத்திலிருந்து எந்தவித ஆபத்துக்கும் உட்படுவதற்கு நான் சித்தம். ஆனால் இப்படி நீங்கள் திடீர் திடீர் என்று..."

இப்போது வீர வைஷ்ணவன் குறுக்கிட்டு, "இது தெரியவில்லையா தம்பி உனக்கு? எதிரே வருகிறவர்கள் யார் என்று தெரிந்து அதற்குத் தக்கபடி காரியம் செய்வதற்காக இளவரசர் இந்த உபாயத்தைக் கையாண்டார்! வருகிறவர்கள் யாராயிருந்தாலும் கத்திச் சண்டையைக் கண்டால் கொஞ்சம் நின்று பார்ப்பார்கள் அல்லவா?" என்றான்.

இளவரசர், "திருமலை சொல்வதும் சரிதான். என்னுடைய ஜாதக விசேஷமும் ஒன்று இருக்கிறது. என்னுடன் யாராவது சிநேகமாக இருந்தால் அவர்களுக்கு மற்றவர்களின் அசூயையும் பகைமையும் நிச்சயம் சித்திக்கும். அதற்காக, நான் யாருடைய சிநேகத்தையாவது விரும்பினால் அவர்களுடன் அடிக்கடி சண்டை பிடிப்பது வழக்கம். இதைப் பொருட்படுத்தாதவர்கள்தான் என்னுடைய சிநேகிதர்களாக இருக்க முடியும்!" என்றார்.

"அப்படியானால் சரி! இனிமேல் தாங்கள் சண்டையை ஆரம்பிப்பதற்குக் காத்திராமல் நானே ஆரம்பித்து விடுகிறேன். இளவரசே! தங்களுக்குச் செய்தி கொண்டு வந்த நான் ஒரு முக்கியமான செய்தியைச் சொல்ல மறந்து விட்டேன். அதை இப்போது சொல்லி விட விரும்புகிறேன்! சொல்லியே ஆக வேண்டும். தாங்கள் கேட்க விரும்பா விட்டால் மறுபடியும் கத்தியை எடுங்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

"வேண்டாம்! செய்தியைச் சொல்லுங்கள், கேட்கிறேன்."

"நம்மைச் சுற்றி நின்ற கூட்டத்தில் ஒரு பெண் கையில் காம்புள்ள குமுத மலருடன் நின்று கொண்டிருந்தாளே, அவளுடைய கண் வீச்சுக்கு நான் தோற்று விட்டேன் என்று கூடத் தாங்கள் சொல்லவில்லையா? அந்தப் பெண் யார் தெரியுமா?"

"தெரியாது. அவளை நான் நன்றாய்ப் பார்க்கவில்லை. பார்க்கும் வழக்கமும் எனக்குக் கிடையாது."

"இளவரசே! அவள்தான் தங்களுக்கு ஒரு செய்தி சொல்லி அனுப்பினாள். சொல்லத் தவறிவிட்டேன். எப்படிச் சொல்வது? தங்களைச் சந்தித்ததிலிருந்து தங்களுடன் துவந்த யுத்தம் செய்வதற்கும் தலையில் வீடு இடிந்து விழாமல் தப்புவதற்குமே சரியாக இருக்கிறதே! ஆகையால் சொல்லச் சரியான சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. திடீரென்று அந்தப் பெண்ணைப் பார்த்தபோது அவள் கூறிய செய்தியைச் சொல்லவில்லையே என்ற நினைவு வந்தது. அப்போது சிறிது அசந்து விட்டேன். அந்தச் சமயம் பார்த்து என் கத்தியைத் தட்டி விட்டீர்கள்...."

"போகட்டும்; அந்தப் பெண் யார்? அவள் எதற்காக எனக்குச் செய்தி அனுப்ப வேண்டும்?"

"ஐயா! அவள்தான் பூங்குழலி!"

"அழகான பெயர். ஆனால் நான் கேள்விப்பட்டதில்லை."

"ஐயா! 'சமுத்திர குமாரி' என்ற பெயர் நினைவிருக்கிறதா?"

''சமுத்திர குமாரி — சமுத்திர குமாரி —அப்படி ஒரு பெயரும் எனக்கு நினைவில் இல்லையே! அவளைப் பார்த்ததாகக் கூட ஞாபகம் இல்லையே!''

''தயவுசெய்து கொஞ்சம் ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள். தங்களுக்கு நினைவில்லை யென்றால் அந்தப் பெண்ணின் நெஞ்சு உடைந்து விடும். கோடிக் கரையில் தாங்கள் மரக்கலம் சேருவதற்காகப் படகில் ஏறச் சித்தமாயிருந்தீர்கள். அச்சமயம் ஒரு பெண் தன்னந்தனியாகப் படகு விட்டுக் கொண்டு கடலிலிருந்து கரைக்கு வந்தாள். தாங்கள் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தீர்கள். அவளும் நீங்கள் எல்லாரும் யார் என்று தெரிந்து கொள்வதற்காக நீங்கள் நின்ற இடத்துக்குச் சமீபமாக வந்தாள். 'இந்தப் பெண் யார்?' என்று தாங்கள் கலங்கரை விளக்கத் தலைவரைக் கேட்டீர்கள். அவர் 'இவள் என் குமாரி' என்றார். தாங்கள் உடனே, 'ஓகோ! இவள் உமது குமாரியா? சமுத்திர குமாரி என்றல்லவா நினைத்தேன்?' என்றீர்கள். அதை அந்தப் பெண் மறக்காமல் நினைவு வைத்துக் கொண்டிருக்கிறாள். அந்தப் பெண்ணின் உதவியினால்தான் நான் கடல் கடந்து இலங்கைக்கு வர முடிந்தது...''

''நீர் சொன்ன பிறகு எனக்கும் இலேசாகக் கொஞ்சம் நினைவுக்கு வருகிறது. ஆனால் கோடிக்கரை சமுத்திர குமாரிக்கு இங்கே அநுராதபுரத்துக்குச் சமீபத்தில் என்ன வேலை? இவர்களுடன் எதற்காக வந்திருக்கிறாள்? ஒருவேளை உம்மைத் தேடிக் கொண்டா?...''

''இல்லை; அப்படி ஒரு நாளுமிராது. என்னைத் தேடி வர நியாயம் இல்லை. யாரையாவது தேடி வந்திருந்தால் அது தங்களைத் தேடித்தான் இருக்க வேண்டும். எதற்காக என்று எனக்குத் தெரியாது!''

இப்படிச் சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் சற்றுத் தூரத்தில் சேநாதிபதியின் பக்கத்தில் வந்துகொண்டிருந்த பூங்குழலியைப் பார்த்தான். அவள் தலை குனிந்தவண்ணம் நடந்தாள். ஆயினும் அவளுடைய கவனம் கருத்து எல்லாம் இளவரசரிடமே இருக்கின்றன என்பதை உணர்ந்து கொண்டான். சிறிது நேரத்துக்கொரு தடவை அவளுடைய கடைக்கண் இளவரசரை நோக்குவதையும் அறிந்தான். அச்சமயம் அவளைப் பற்றித் தாங்கள் பேசுகிறோம் என்பதும் உள்ளுணர்வினால் அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும். இல்லாவிடில் அப்படி அவள் குனிந்த தலை நிமிராமல் நடப்பதற்கு யாதொரு அவசியமும் இல்லையே! அம்மம்மா! ஒரு கணமும் பார்த்த திசையைப் பாராமல் ஓயாமல் சலித்துக் கொண்டிருக்கும் கண்கள் அல்லவா அவளுடைய கண்கள்!

மேற்கூரை யில்லாமல் வேலைப்பாடான கருங்கல் தூண்கள் மட்டும் நின்ற மண்டபத்தை அவர்கள் அடைந்தார்கள். சுற்றிலும் ஓங்கி வளர்ந்திருந்த மரங்கள் அந்த மண்டபத்துக்கு ஓரளவு நிழலை அளித்தன. மண்டபத்தின் மத்தியில் ஒரு மேடான பீடமும் இருந்தது. அங்கே சென்று இளவரசரும் சேநாதிபதியும் பார்த்திபேந்திரனும் அமர்ந்தார்கள்.

வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் சற்றுத் தள்ளி நின்றார்கள்.

இன்னொரு பக்கத்தில் ஒரு தூணின் மறைவில் பூங்குழலி நின்று கொண்டிருந்தாள். அங்கிருந்தபடி அவள் இளவரசரையும் வந்தியத் தேவனையும் பார்க்கக் கூடியதா யிருந்தது.

அந்தக் கூரை யில்லாத மண்டபத்தைச் சுற்றிலும் வீரர்கள் வியூகம் வகுத்தது போல் இரண்டு வரிசையாக நின்றார்கள்.

இன்னும் சற்றுத் தூரத்தில் குதிரைகளும் யானையும் நிறுத்தப்பட்டிருந்தன.

இளவரசர் பார்த்திபேந்திரனைப் பார்த்து, ''என் தமையனாரும் பாட்டனாரும் என்ன செய்தி சொல்லி அனுப்பியிருக்கிறார்கள்? கேட்க ஆவலாக இருக்கிறேன்!'' என்றார்.

''இளவரசே! சோழ ராஜ்யம் பெரிய அபாயத்துக்குள்ளாகி யிருக்கிறது. இது தங்களுக்குத் தெரிந்திருக்கும்...''

''ஆம், ஐயா! சக்கரவர்த்தி நெடுநாளாக நோய்ப்பட்டிருக்கிறார்...''

''அபாயம் அதுமட்டுமல்ல; சாம்ராஜ்யத்துக்கே பேரபாயம் நேர்ந்திருக்கிறது. பெரிய அதிகாரங்களில் உள்ளவர்கள் துரோகிகளாகி விட்டார்கள். சக்கரவர்த்திக்கும் பட்டத்து இளவரசருக்கும் தங்களுக்கும் விரோதமாகச் சதி செய்யத் தொடங்கி விட்டார்கள். தங்கள் தமையனுருக்குப் பட்டம் இல்லை என்று சொல்லிவிட்டுச் சிவபக்தி வேஷதாரியான உருத்திராட்ச பூனை மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டுவது என்று தீர்மானித்திருக்கிறார்கள். பழுவேட்டரையர்களும், சம்புவரையர்களும், இரட்டைக் குடை இராஜாளியாரும், மழபாடி மழவரையரும் மற்றும் இவர்களைப் போன்ற வேறு பல துரோகிகளும் இந்தக் கூட்டுச் சதியில் சேர்ந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் முயற்சி பற்றி நாம் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை. வடதிசை சைன்

யமும் தென் திசை சைன்யமும் நம் வசத்தில் இருக்கின்றன. திருக்கோவலூர் மிலாடுடையாரும் கொடும்பாளூர்ப் பெரிய வேளாரும் நம் பக்கம் இருக்கிறார்கள். இவர்களுடைய உதவிகளைக் கொண்டும் சைன்யத்தின் துணை கொண்டும் துரோகிகளின் சதியை ஒரு நொடியில் சின்னாபின்னப்படுத்தி விடலாம். ஆனால் எதிரிகளுக்கு அதிக காலம் இடம் கொடுத்துவிடக் கூடாது. துரோகிகளின் சூழ்ச்சியை முளையிலேயே கிள்ளி எறிந்துவிட வேண்டும். இப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்டிருப்பதை முன்னிட்டுத் தங்களை உடனே காஞ்சிக்கு அழைத்து வரும்படியாகத் தங்கள் தமையனாரும் பாட்டனாரும் என்னை அனுப்பி வைத்திருக்கிறார்கள். இச்சமயத்தில் தாங்கள் சகோதரர்கள் இருவரும் பிரிந்திருக்கலாகாது என்றும் ஒரே இடத்தில் இருப்பது மிக அவசியம் என்றும் தங்கள் பாட்டனார் கருதுகிறார். இன்னும், தங்கள் தமையனாரின் உள்ளத்தில் இருப்பதையும் சொல்லிவிட விரும்புகிறேன். அவருக்கு ஒரே இடத்தில் இருந்து ராஜ்யம் ஆளுவதில் விருப்பம் இல்லை. கடல் கடந்த நாடுகளுக்கெல்லாம் கப்பலேறிச் செல்ல வேண்டும் என்றும் அந்த நாடுகளையெல்லாம் வென்று சோழர் புலிக் கொடியைப் பறக்க விட வேண்டுமென்றும் அவர் துடிதுடித்துக் கொண்டிருக்கிறார். வட நாட்டுப் படையெடுப்புக்குப் பழுவேட்டரையர்கள் முட்டுக் கட்டை போட்டதிலிருந்து அவருடைய போர் வெறி ஒன்றுக்குப் பத்து மடங்கு ஆகியிருக்கிறது. ஆகையால் தாங்கள் காஞ்சி வந்து சேர்ந்ததும் தஞ்சைக்குப் படையெடுத்துச் சென்று சதிகாரர்களையெல்லாம் அதம் செய்து ஒழித்து விட்டுச் சோழ சிம்மாசனத்தில் தங்களை அமர்த்தி முடிசூட்டி விட்டு...''

இத்தனை நேரமும் கவனத்துடனும் மரியாதையுடனும் கேட்டு வந்த இளவரசர் இப்போது தம் செவிகளைக் கையினால் மூடிக் கொண்டு, ''வேண்டாம்! அத்தகைய விபரீத வார்த்தைகளைச் சொல்லாதீர்கள். சோழ சிம்மாதனத்துக்கும் எனக்கும் வெகு தூரம்!'' என்றார்.

''தங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் நான் சொல்லவில்லை. அது தங்களுடைய தமையனார் இஷ்டம்; தங்கள் இஷ்டம். நீங்கள் சகோதரர்கள் விவாதித்துத் தீர்த்துக்கொள்ள வேண்டியது. ஆனால் சதிகாரர்களை ஒழிப்பதில் இரண்டு பேரும் ஒன்றுபட வேண்டியது அவசியம். உடனே தாங்கள் காஞ்சிக்குப் புறப்பட்டு வாருங்கள். பழுவேட்டரையர்களையும் சம்புவரையர்களையும் பூண்டோடு ஒழிப்போம். சிவபக்தி வேஷதாரியான மதுராந்தகனைச் சிவலோகத்துக்கே அனுப்பி வைப்போம். பிறகு தாங்களும் தங்கள் தமையனாரும் யோசித்து உசிதம் போல் முடிவு செய்யுங்கள்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஐயா! எல்லாம் நாமே முடிவு செய்யவேண்டியதுதானா? என் தந்தை —சக்கரவர்த்தி — அவருடைய விருப்பம் இன்னதென்று நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா? ஒருவேளை தாங்கள் தெரிந்து கொண்டிருக்கிறீர்களா? என் தமையனாருக்குத் தந்தையிடமிருந்து ஏதேனும் அந்தரங்கச் செய்தி வந்ததா?''

''இளவரசே! இந்தச் சந்தர்ப்பத்தில் உண்மையைச் சொல்ல வேண்டியது அவசியம். மூடி மறைப்பதில் பயனில்லை. தங்கள் தந்தையின் விருப்பத்தை இச்சமயம் அறிந்து கொள்வது இயலாத காரியம். சக்கரவர்த்தி இப்போது சுதந்திர புருஷராயில்லை. பழுவேட்டரையர்களின் சிறையில் இருக்கிறார்.



அவர்களுடைய அனுமதியின்றி யாரும் சக்கரவர்த்தியைப் பார்க்க முடியாது; பேசவும் முடியாது. அவருடைய விருப்பத்தைத் தெரிந்துகொள்வது எங்ஙனம்? தந்தையைக் காஞ்சிக்கு வரச் சொல்வதற்காகத் தங்கள் தமையனார் பெரு முயற்சி செய்தார். காஞ்சியில் பொன் மாளிகை கட்டினார். சக்கரவர்த்தி விஜயம் செய்து கிரகப் பிரவேசம் செய்ய வேண்டும் என்று அழைப்பு அனுப்பினார். ஆனால் சக்கரவர்த்தியிடமிருந்து மறு ஓலை வரவில்லை....''



''என் தந்தை நோய்வாய்ப்பட்டிருப்பதும் நடக்க முடியாதவரா யிருப்பதும் தெரிந்த விஷயம்தானே?''

''இளவரசே! தங்கள் தந்தை—மூன்று உலகங்களின் சக்கரவர்த்தி—காஞ்சிக்குக் காலால் நடந்து வரவேண்டுமா? யானைகள் குதிரைகள் இல்லையா? வண்டி வாகனங்கள் இல்லையா? தங்க ரதங்களும் முத்துச் சிவிகைகளும் இல்லையா? தலையால் சுமந்துகொண்டு வருவதற்கு முடி சூடிய சிற்றரசர்கள் ஆயிரம் பதினாயிரம் பேர் போட்டி போட்டுக் கொண்டு வர மாட்டார்களா? காரணம் அதுவன்று. பழுவேட்டரையர்களின் துரோகம்தான் காரணம். தஞ்சை அரண்மனை இப்போது சக்கரவர்த்தியின் சிறையாக மாறிவிட்டது. இளவரசே! தங்கள் தந்தையின் உயிரைக் காப்பாற்ற விரும்பினால் உடனே புறப்பட்டு வாருங்கள்!''

இந்த வார்த்தைகள் இளவரசரின் உள்ளத்தைக் கலக்கி விட்டன என்பது நன்றாகத் தெரிந்தது. அவருடைய களை பொருந்திய முகத்தில் முதன் முதலாகக் கவலைக் குறி தென்பட்டது. இளவரசர் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டுச் சேநாதிபதியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

''தளபதி! தங்களுடைய யோசனை என்ன? சில நாளைக்கு முன்பு முதன் மந்திரி அநிருத்தப்பிரம்மராயர் வந்திருந்தார். அவர் என் தந்தையின் மதிப்புக்கும் அந்தரங்க அபிமானத்துக்கும் உரியவர். அவர் என்னை இலங்கையிலேயே சில காலம் இருக்கும்படி யோசனை கூறினார். தாங்களும் அதை ஆமோதித்தீர்கள். 'இங்கே சண்டை ஒன்றும் நடக்கவில்லையே, நான் எதற்கு இருக்க வேண்டும்' என்று கேட்டதற்குச் சமாதானம் சொன்னீர்கள். முதன் மந்திரி இதோ நிற்கும் வைஷ்ணவரிடம் அதே யோசனையைத் திரும்பச் சொல்லி அனுப்பி யிருக்கிறார். என் தமக்கை இளையபிராட்டியிடம் எனக்கு எவ்வளவு மதிப்பு உண்டு என்பது தங்களுக்குத் தெரியும். அவர் இட்ட கோட்டை நான் தாண்ட மாட்டேன். இலங்கைக்கு அவர் வரச் சொல்லித்தான் வந்தேன். இளைய பிராட்டி இதோ இந்த வாணர் குலத்து வீரனிடம் ஓலை அனுப்பி யிருக்கிறார். ஒரு விதத்தில் என் தமக்கையின் செய்தியும் பார்த்திபேந்திரர் கூறியதை ஒட்டி யிருக்கிறது. ஆனால் உடனே புறப்பட்டுப் பழையாறைக்கு வரும்படி எழுதி அனுப்பி யிருக்கிறார். என் தமையனாரோ காஞ்சிக்கு வரும்படி இவரிடம் கூறியனுப்பியுள்ளார். சேநாபதி! தங்களுடைய கருத்து என்ன?'' என்றார்.

''இளவரசே! இன்று காலை வரையில் தாங்கள் இந்த இலங்கைத் தீவிலேயே இருக்கவேண்டும் என்ற கருத்துடனேயே நான் இருந்தேன். நேற்றிரவுகூட இவருடன் நெடுநேரம் விவாதித்துக் கொண்டிருந்தேன். இவர் வெகு நேரம் வாதித்தும் நான் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் இன்று அதிகாலையில் அதோ நிற்கிறாளே, அந்தப் பெண் வந்து ஒரு செய்தி சொன்னாள். அதைக் கேட்டதும் என் கருத்தை மாற்றிக் கொண்டேன். தாங்கள் உடனே காஞ்சிக்குப் போக வேண்டியது அவசியம் என்று இப்போது எனக்குத் தோன்றுகிறது!'' என்றார் இலங்கைச் சேனாதிபதி.

தூண் மறைவிலே நின்று தன்னைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்த பூங்குழலியின் மீது இளவரசர் தம் பார்வையைச் செலுத்தினார்.

''அபிமன்யுவை நாலாபுறமும் பகைவர்கள் தாக்கிக் கொன்றதாகக் கேள்

விப்பட்டிருக்கிறேன். என்னை நாலா புறமிருந்து வரும் செய்திகளை தாக்கிக் கொன்றுவிடும்போலிருக்கிறது!'' என்று இளவரசர் சொல்லிக் கொண்டார்.

''அந்தப் பெண் என்னதான் செய்தி கொண்டு வந்திருக்கிறாள்?'' என்றார்.

''அவளே சொல்லட்டும்!'' என்றார் பெரிய வேளார்.

பூங்குழலி தயங்கித் தயங்கி நடந்து வந்தாள். இளவரசர் முன்னால் வந்து நின்றாள். நாலு பக்கமும் திரும்பிப் பார்த்தாள். சேநாதிபதியைப் பார்த்தாள்; பார்த்திபேந்திரனைப் பார்த்தாள். சற்றுத் தூரத்தில் நின்ற வந்தியத்தேவனையும் ஆழ்வார்க்கடியானையும் பார்த்தாள். இளவரசர் முகத்தை மட்டும் அவளால் ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை.

''பெண்ணே! சொல், சீக்கிரம்!'' என்றார் சேநாதிபதி.

பூங்குழலி ஏதோ சொல்ல முயன்றாள். ஆனால் வார்த்தைகள் ஒன்றும் வரவில்லை.

''ஆகா! இந்த உலகமே ஊமை மயமாகிவிட்டது போல் காண்கிறது!'' என்றார் அருள்மொழி வர்மர்.

அவ்வளவுதான். பூங்குழலி தன் கண்ணிமைகளை உயர்த்தி ஒரு தடவை, ஒரு கணத்திலும் சிறிய நேரம், இளவரசரை நோக்கினாள். அதற்குள் அக் கண்களில் கண்ணீர் ததும்பி வழிய ஆரம்பித்துவிட்டது. உடனே அங்கிருந்து ஓட்டம் பிடித்தாள். ஓடிப் போய்த் தூரத்தில் அடர்ந்து வளர்ந்திருந்த மரங்களுக்கிடையில் மறைந்தாள்.

எல்லாரும் அதை வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

வந்தியத்தேவன் முன்வந்து, ''ஐயா! இவள் முன்னொரு தடவை இப்படித்தான் ஓடினாள். நான் தொடர்ந்து போய்ப் பிடித்து விட்டேன். அனுமதி கொடுத்தால் இப்போதும் சென்று பிடித்துக் கொண்டு வருகிறேன்!'' என்றான்.

''அப்படியே செய்! ஆனால் அதற்குள் அவள் கொண்டு வந்த செய்தி என்ன என்பதைச் சேநாதிபதி சொல்லட்டும்!'' என்றார் இளவரசர்.

அதற்குச் சேநாதிபதி, ''அதை இரண்டே வார்த்தைகளில் சொல்லி விடலாம். இளவரசே! தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு வருவதற்காகப் பழுவேட்டரையர்கள் இரண்டு பெரிய மரக்கலங்களையும் அவை நிறைய போர் வீரர்களையும் அனுப்பியிருக்கிறார்கள். மரக்கலங்கள் தொண்டைமான் ஆற்றுக் கால்வாயில் புகுந்து மறைவான இடத்தில் வந்து நிற்கின்றன!'' என்றார். **(தொடரும்)**




## 2. ஜீவாவும் காந்திஜியும்

திரு ப. ஜீவானந்தம் (ஜீவா) காரைக்குடிக்கும் திருப்பத்தூருக்குமிடையே உள்ள சிராவயல் என்ற கிராமத்தில் காந்திஜி பெயரால் ஓர் ஆசிரமத்தை ஏற்படுத்தி நடத்தி வந்தார்.

காந்திஜி 1927-ம் ஆண்டு தமிழகத்துக்கு வந்த சமயம் இந்த ஆசிரமத்துக்கு விஜயம் செய்தார். ஜீவா தமது கையாலேயே நூற்ற நூலை மாலையாக்கி அவருக்கு அணிவித்தார்.

காந்திஜி ஆசிரமத்தைப் பார்த்துத் திருப்தி அடைந்த பின்பு, ''உங்களுக்கு ஏதாவது சொத்து இருக்கிறதா?'' என்று கேட்டார்.

''ஓ! இருக்குதுங்களே! பாரதமே என் சொத்துதானே!'' என்று உடன் பதில் வந்தது. இப்பதிலைக் கேட்டுக் காந்திஜி அயர்ந்து போனார். தொடர்ந்து, ''இல்லை நீங்கள்தான் பாரதத்தின் சொத்து'' என்றார் காந்திஜி.

- நஜன்

# அடேயப்பா, வளர்ச்சியின் உச்ச தசை!



பெரிய குழந்தைகளுக்கு (இரும்புச் சத்து அடங்கிய) இன்க்ரமின்* ஸிரப்

இளங் குழந்தைகளுக்கு

இன்க்ரமின்* டிராப்ஸ்









# இதோ, உங்கள் குழந்தை நாளொரு மேனியாக வளருவதற்கான ஒரு டானிக்: இன்க்ரமின்*



வளரும் குழந்தைகளுக்கு தேவை இன்க்ரமின் டானிக். அது பிரத்தியேகமாகப் பசியைத் தூண்டி, வயிறார உண்ணும் மிகுதியான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றி, வாட்டசாட்டமாக வளர்வோங்கச் செய்கிறது. சாப்பிடும் புரத சத்து அனைத்தையும் நன்கு பயன்படுத்திக்கொள்ள உதவுகிறது இன்க்ரமின். காரணம், வழக்கமாக நம் உணவில் இல்லாத ஒரு முக்கியமான அமினோ அமிலம் சேர்ந்துள்ள டானிக் இது. வயது எதுவானாலும் (4 வாரம் முதல் 14 வயது வரை) அன்றாடம் அவனுக்குக் கொடுத்து வாருங்கள் செர்ரிப் பழச் சுவை ததும்பும் இன்க்ரமின். மறவாதீர்கள் : இதுவே வளர்ச்சிப் பருவம், ஆம், இன்க்ரமின் பருவம்!



## வளர்ச்சிக்கான பசியை உங்கள் குழந்தைக்கு வளமுடன் வழங்குவது இன்க்ரமின்*

எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன. உலகெங்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு பெயராகிய லேடர்லி தயாரிப்பது இன்க்ரமின்*

Lederle

லேடர்லி டிவிஷன் — ஸையனமிட் இந்தியா லிமிடெட், 254/D2, டாக்டர் அனி பெஸண்ட் ரோடு, பம்பாய்25

*அமெரிக்கன் ஸையனமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

லின்டாஸ்-INC 2-140 TM

# ராமாயணம் ராஜாஜி

இந்தச் சந்தர்ப்பத்தில் கைகேயிக்குத் தன் மகா பாப எண்ணத்தைக் கருதி ஓரளவு சந்தேகம் உண்டாயிற்று. ஒரு வேளை, ''மாட்டேன், இது மகா பாபம், ஆணையும் சபதமும் இத்தனை பெரிய பாபம் செய்யும்படி இடம்தரா'' என்று சொல்லி விடுவானோ என்று பயம் ஏற்பட்டது. எழுந்து நின்று கைகள் கூப்பி நான்கு திசைகளும் பார்த்து உரத்த குரலில், ''ஓ. தேவர்களே! என் புருஷன் செய்த சபதத்திற்கு நீங்கள் எல்லாரும் சாக்ஷியாவீர்கள். ஏ! சூரிய சந்திராதி கிரகங்களே, நீங்களும் சாக்ஷி. ஏ! பஞ்சபூதங்களே, நீங்களும் சாக்ஷி, சத்தியம் தவறாத என் புருஷன் செய்த சபதத்திற்கு நீங்கள் எல்லாரும் சாக்ஷியாவீர்கள்!'' என்று சொன்னாள்.

மகிழ்ச்சி மலர்ந்த முகத்தோடு தசரதன் கண்கொட்டாமல் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான். காம மோகத்தால் அரசன் மதியிழந்து வலையில் சிக்கினான் என்று நிச்சயம் செய்து கொண்டாள். அதன் மேல் தைரியமாக ஆரம்பித்தாள்:

''அரசனே, நினைவிலிருக்கிறதா? முன்னாளில் யுத்த பூமியில் காயப்பட்டு உயிரிழக்கும் தருவாயில் நீர் இருந்த போது இருட்டில் ரதத்தை நானே மெள்ளச் செலுத்தி, அப்புறப்படுத்தி, உம்முடைய உடலில் பாய்ந்திருந்த அம்புகளை யெல்லாம் எடுத்துச் சுகப்படுத்தினேன். மூர்ச்சை தெளிந்ததும், 'பகைவர்கள் என்னைக் கொன்றிருப்பார்கள்; நீ எனக்கு உயிர் கொடுத்தாய். உனக்கு வேண்டிய வரங்கள் இரண்டு கேள்' என்றீர். நான் 'இப்போது வேண்டாம். பிறகு வேண்டும் போது கேட்கிறேன். இப்போது நீர் உயிர் தப்பியதே எனக்குப் பெரு மகிழ்ச்சி' என்று சொன்னேன் அல்லவா? நினைவிலிருக்கிறதா?'' என்றாள்.

''நன்றாக நினைவிலிருக்கிறது! இரண்டு வரங்களையும் கேள். இப்போதே தருகிறேன்'' என்றான் தசரதன்.

''சபதம் செய்திருக்கிறீர். ராமன் மேல் ஆணையிட்டுச் சபதம் செய்திருக்கிறீர். தேவர்களும் பஞ்சபூதங்களும் சாக்ஷியாக இருக்கிறார்கள். இதோ கேட்கிறேன். சத்தியத்தைக் காப்பாற்றுவீர். உம்முடைய முன்னோர்கள் வழியில் நின்று நல்ல கதியடைவீர். வாக்குத் தவறாதீர். இப்போது அமைத்து வைத்திருக்கும் பட்டாபிஷேக சாமக்கிரியைகளைக் கொண்டு பரதனுக்குப் பட்டம் கட்டுவீராக. முதல் வரமாக இதை வேண்டுகிறேன். இரண்டாவது வரம் நான் கேட்பது, உம்முடைய மகன் ராமனைப் பதினான்கு வருஷம் வனவாசம் செய்யும்படி உடனே தண்டகாரண்யம் அனுப்புவீர். செய்த பிரதிக்ஞையைப் புறக்கணிக்காதீர். உம்முடைய குலத்தின் புகழையும் புண்ணியத்தையும் காப்பாற்றுவீர்!'' என்றாள்.

## 21. மனைவியா, பிசாசா?

''இது தூக்கத்தில் காணும் துர்ச்சொப்பனமா? நான் விழித்திருக்கிறேனா? இல்லை, தூங்குகிறேனா? ஏதாவது சித்தப் பிரமை வியாதி என்னைப் பீடிக்கிறதா? முன் ஜன்ம பாபங்களின் நினைவு வந்து அதை இப்போது நிகழும் உண்மை போல் காண்கிறேனா? ஏதாவது கிரக பீடையா? பைத்தியம் பிடித்து ஏதோ நடக்கிறதாகக் காண்கிறேனா. ஒன்றும் விளங்கவில்லையே!'' என்று தசரதன் சித்தம் கலங்கி மனத்தில் உண்டான பயத்தைத் தாங்க முடியாமல் தவித்துத் தவித்துப் பிரக்ஞை இழந்தான். கொஞ்ச நேரம் கழித்துக் கண்ணைத் திறந்து புலியைக் கண்ட மானைப்போல் கைகேயியைப் பார்த்து நடுங்கினான். ''ஐயோ!'' என்று தரையில் உட்கார்ந்து கதறினான். மந்திரவாதியால் பிடிக்கப்படும் பாம்பைப் போல் ஆடினான். மறுபடியும் மூர்ச்சை அடைந்து விட்டான். பிறகு வெகு நேரம் கழித்து நினைவு அடைந்து கண்களினின்று நெருப்புப் பொறிகள் பறக்க, ''ஏ, கொடிய அரக்கியே! குலத்தைக் கெடுக்க வந்த பாவியே! உனக்கு என்ன தீங்கு செய்தான் ராமன்? பெற்ற தாயைப்

போல் உன்னைப் பாவித்து வந்தானே! உன்னை நான் ஒரு பெண் என்று எண்ணினேனே! கொல்லும் விஷப் பாம்பு என்பது தெரியாமல் உன்னை எங்கிருந்தோ கொண்டு வந்து மடியில் வைத்துக் கொண்டேன்!'' என்றான்.

கைகேயி ஒன்றும் பேசவில்லை. ''நாடெல்லாம் புகழும் ராமனை என்ன குற்றம் சொல்லி நான் தள்ளுவேன்? கௌசலையைத் தள்ளிவிட்டுப் பிழைக்கலாம். தரும சொரூபி சுமத்திரையையும் இழந்து பிழைப்பேன். ராமனை இழந்தால் பிறகு என் உயிர் நிற்காது. ஜலமில்லாமல் பிழைப்பேன். சூரிய ஒளியில்லாமல் சமாளிப்பேன். ராமனை விட்டு விட்டு உயிரை வைத்திருக்க என்னால் முடியாது. இந்த மகா பாப எண்ணத்தை மனத்தினின்று விலக்கித் தள்ளு. உன் பாதத்தில் என் தலையை வைத்து வருந்தி வேண்டிக் கொள்கிறேன். எவ்வளவு தடவை நீயே சொல்லியிருக்கிறாய்: 'எனக்கு இரண்டு அருமைக் குழந்தைகள்; அதில் மூத்தவன் ராமன்தான் எனக்கு அதிகப் பிரியமானவன்' என்று இவ்வாறு பல தடவை நீ சொல்லியிருக்கிறாயே? நீ எப்போதும் நினைத்து வந்ததை இப்போது நான் காரியத்தில் நிறைவேற்றினேனேயன்றி வேறில்லை. அப்படியிருக்க ஏன் இம்மாதிரி கொடிய வரத்தைக் கேட்கிறாய்? இல்லை, இல்லை. என்னைப் பரீட்சை செய்கிறாய்! பரதன் மேல் எனக்குப் பிரியம் உண்டா என்பதைக் காண இப்படிச் செய்கிறாயா? பெரும் புகழ் பெற்ற குலத்தைப் பாபச் செயலில் அழித்து விடாதே'' என்றான். அப்போதும் கைகேயி ஒன்றும் பேசவில்லை. கோபப் பார்வை பார்த்தாள்.

''இது வரையில் எனக்கு வருத்தம் தரக்கூடிய காரியம் ஏதும் நீ செய்ததில்லை. பொருத்தமில்லாத பேச்சும் பேசியதில்லை. இப்பொழுது யார் உன் புத்தியைக் கெடுத்தது? இது உன் செயல் அல்ல. நான் நம்பமாட்டேன்! என் காதலியே! எத்தனை தடவை நீ என்னிடம் சந்தோஷமாகச் சொல்லியிருக்கிறாய்? 'பரதன் மிகப் பெருந்தன்மையான பிள்ளை; சந்தேகமில்லை. ஆனால் ராமனுக்குச் சமானமாகமாட்டான் பரதன்' என்று மகிழ்ந்து மகிழ்ந்து சொல்லுவாயே! அந்த ராமனையா நீ இப்போது கூசாமல் காட்டுக்கு அனுப்பு என்கிறாய்? அவனால் காட்டில் இருக்க முடியுமா? இதையா நீ விரும்புகிறாய்! மிருகங்கள் நிறைந்த பயங்கரமான காட்டுக்கு நம்முடைய ராமனை அனுப்பச் சொல்லுகிறாயா? அவன் எவ்வளவு அன்பு செலுத்தி உனக்குச் சேவை செய்திருக்கிறான்? அதை மறந்து விட்டு எப்படி உனக்கு மனம் வந்தது, அவனைக் காட்டுக்கு அனுப்பு என்று வாயால் சொல்ல? அவன் என்ன தவறு செய்தான்? இந்த அரண்மனையில் நூற்றுக்கணக்கான ஸ்திரீகள் இருக்கிறார்கள். யாராவது ராமனைப் பற்றி ஒரு வார்த்தை, ஒரு அபவாதம், ஒரு குற்றம் சொல்லியதுண்டா? உலகமெல்லாம் அவனை விரும்புகிறதே! எல்லாருடைய அன்பையும் தன்னுடைய குணத்தாலும் சீலத்தாலும் சம்பாதித்திருக்கிறானே? உனக்கு ஏன் வந்தது அவன் மேல் இப்போது வெறுப்பு? இந்திராதி



தேவர்களுக்குச் சமானமாக இருக்கிருனே என் மூத்த மகன்! தவம் செய்யும் ரிஷிகளுடைய முக தேஜஸை அடைந்திருக்கிருனே! ராமனுடைய சத்தியம், சீலம், சிநேகம், அறிவு, படிப்பு, வீரம், பெரியோர்களிடம் அடக்கம் இவற்றை எல்லோரும் பாராட்டுகிருர்களே! அவன் வாயில் ஒரு கடினமான வார்த்தை வந்ததை நான் பார்த்ததில்லையே. அவனை எப்படி 'நீ காட்டுக்குப் போ' என்று தந்தையான நான் சொல்லுவேன்? இது சாத்தியமா? நான் கிழவன். எனது அந்திம காலத்தில் என்னிடம் இரக்கம் காட்டு, கைகேயி! இந்த ராஜ்யத்தில் உள்ள செல்வத்தில் எதை வேண்டுமானுலும் கேள். எல்லாவற்றையும் கேள். உனக்குத் தருவேன். என்னை யமனிடம் அனுப்பாதே! கைகூப்பித் தொழுகிறேன். உன் இரு பாதங்களையும் பிடித்து வேண்டிக் கொள்கிறேன். சரணம், சரணம்! ராமனைக் காப்பாற்றுவாயாக. என்னை அதர்மத்தைச் செய்யச் சொல்லாதே!'' என்ருன்.

இப்படிச் சோகக் கடலில் விழுந்து மூழ்கித் தவித்துக் கொண்டு கரையேற வகை தெரியாமல் அடிக்கடி நினைவு இழந்தும் கண்ணீர் விட்டு அலறியும், வேதனைப்பட்டுக் கொண்டிருந்த மகாராஜனைப் பார்த்து, கைகேயி சிறிதும் இரக்கமின்றிக் கொடிய மொழிகளைப் பேசினுள்:

''அரசனே! வரங்கள் இரண்டு கொடுத்து விட்டுப் பிறகு கொடுத்தேனே என்று வருத்தப்பட்டுப் புறக்கணித்தீரானுல், அரசராகிய உமக்கு எப்படி வாய் எழும், சத்தியம் என்ருவது, தருமம் என்ருவது பேச? மற்ற அரசர்களிடம் என்ன சொல்லுவீர்; 'ஆம்! என்னைக் காப்பாற்றி எனக்கு உயிர் தந்த கைகேயிக்கு வாக்குத் தந்தேன். பிறகு அது எனக்குப் பிடிக்கவில்லை. கொடுத்த வாக்கைப் பொய்யாக்கினேன்' என்று சொல்லுவீரா? வேறென்ன சொல்லுவீர்? ராஜ குலத்துக்கே அபவாதம் சம்பாதித்துக் கொடுக்கிறீர். 'அரசர்கள் மனைவிக்குக் கொடுத்த வாக்கைப் பொய்யாக்குவார்கள், சொன்னதைச் செய்யமாட்டார்கள்' என்கிற அபவாதத்தை உம்மால் அரச குலம் அடையும். சிபி ஒரு பட்சிக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற தன் உடலிலிருந்து மாமிசத்தை அறுத்தெடுத்துத் தந்தான் என்பது உமக்குத் தெரியாதா? அலர்க்கன் தன் கண்ணைப் பறித்துத் தந்து சத்தியம் காத்து உத்தம கதியடைந்தான் என்று நீர் கேட்டதில்லையா? சமுத்திரமானது ஒப்பந்தம் செய்து கொண்டபின், அந்த ஒப்பந்தத்தை மதித்து, கரையை மீருது நிற்கிறது. செய்த பிரதிக்ஞையைப் பொய்யாக்காதீர்; நல்ல குலத்தைச் சேர்ந்தவர் நீர். முன்னேர் வழியில் நடப்பீராக. இல்லை, இல்லை! நீர் தருமத்தை விட்டுவிட்டு ராமனுக்குப் பட்டமளித்துக் கௌசல்யையுடன் போகித்துச் சுகமாக வாழ்வீர். உமக்குச் சத்தியம் எங்கே போனுல் என்ன? தருமம் எங்கே போனுல் என்ன? எனக்குச் சபதம் செய்து தந்த வரங்களைப் புறக்கணிப்பீராகில் உம்மெதிரில் இன்றே விஷம் குடித்து இறப்பேன். ராமனுக்கு நீர் பட்டாபிஷேகம் செய்வீர். அன்றே நான் சத்தியம் தவறிய உம் எதிரில் உயிர் விடுவேன் நிச்சயம். நான் பரதன்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். வாக்குத் தந்தபடி ராமனைக் காட்டுக்கு அனுப்பினீரானுல் சரி. இல்லையேல் உயிரை விடுவேன்'' என்று கைகேயி உறுதியாகச் சொல்லி விட்டுப் பேச்சை நிறுத்தினுள்.

இரக்கமற்ற மனைவியின் முகத்தைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு தசரதன் பேச்சில்லாமல் நின்ருன். இவள் கைகேயியா அல்லது பிசாசா என்று சந்தேகப்பட்டுப் பார்த்தான். பிறகு கோடரியால் வெட்டப்பட்ட மரத்தைப் போல் கீழே விழுந்தான்.

கொஞ்ச நேரம் கழித்து நினைவு வந்து தீனகரத்தில் மெதுவாகப் பேசினுன்: ''யார் உனக்கு இந்த உபதேசம் செய்து உன் புத்தியைக் கெடுத்தது, கைகேயி? நான் செத்தேன். குலமும் அழிந்தது. எந்தப் பிசாசு உன்னைப் பிடித்துக் கொண்டு இப்படி வெட்கமிழந்து உன்னை ஆடச் செய்கிறது? நீ என்ன நினைக்கிருய்? என் மகன் பரதன், அண்ணன் ராமனைக் காட்டுக்கு அனுப்பி விட்டுத் தான் அரசனுக இருக்க ஒப்புவானு? ஒரு நாளும் ஒப்ப மாட்டான். இதை நீ அறியாயா? ராமனை வனவாசம் போ என்று நான் சொல்லவாவது. இது நடக்கக் கூடிய பேச்சா? உலகத்திலுள்ள அரசர்கள் என்னை இகழமாட்டார்களா? 'மனைவியினுடைய நிர்ப்பந்தத்தால் இந்தக் கிழவனுகிய மூடன் தன் மூத்த குமாரனும் உத்தம புருஷனுமான ராமனை அவனுக்குரிய ராஜ்யத்திலிருந்து துரத்தி விட்டான்' என்று சொல்லிச் சிரிப்பார்கள் என்பது உனக்கு விளங்கவில்

லேயா? ராமனைக் காட்டுக்கு அனுப்பு என்று சுலபமாகச் சொல்லுகிறாய். கௌசல்யை உயிர் விட மாட்டாளா? நான்தான் உயிர் வைத்திருப்பேனா? ஜன கருடைய மகளைப் பற்றி யோசித்தாயா? ராமன் தண்டகாரண்யம் போக வேண்டும் என்ற சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் அவள் உயிர் நீப்பாளே! உன்னை ஒரு ஸ்திரீ என்று நம்பி மனைவியாகக் கொண்டேன். உன் ரூபத்தைக் கண்டு மோசம் போனேன். மதியிழந்தவன் விஷம் கலந்த தேனைக் குடிப்பது போல் உன் அழகைக் கண்டு மயங்கி உன்னைக் கட்டிக் கொண்டேன். வேடனுடைய பாட்டைக் கேட்டு மான் வலையில் சிக்குவது போல் உன் வலையில் சிக்கிப் போய் மாள்கிறேன். உலகம் என்னைச் சீ என்று வெறுத்து என்னை விட்டுத் தூர விலகும். கள் குடித்த பிராமணனைத் தெருவில் எல்லோரும் வெறுப்பது போல என்னை எல்லோரும் வெறுப்பார்கள். ஆஹா! என்ன வரத்தைக் கேட்டாய்? குலம் அழிந்து போகப் போகிறது. ஒரு பெண்ணின் வசம் சிக்கித் தன் அன்புக்குரிய குமாரனைக் காட்டுக்கு அனுப்பிய மூடன் என்கிற இகழ் என்றென்றைக்கும் என்னைப் பற்றிக்கொண்டு நிற்கும். 'நீ வனம் செல்ல வேண்டும்' என்று நான் ராமனுக்குச் சொன்னேனானால் மறு பேச்சுப் பேச மாட்டான். போகிறேன் என்று உடனே சந்தோஷமாகப் போய் விடுவான். நானும் எனக்குப் பின் கௌசல்யையும் சுமித்திரையும் உயிர் நீப்போம். இப்படிச் சம்பாதித்த ராஜ்யத்தை நீ சுகமாக அனுபவிப்பாய். பாவி மூடப் பெண்ணே!

''பரதன் இதற்கெல்லாம் சம்மதிப்பானா? அவனும் இதற்குச் சம்மதித்தானானால் அவன் எனக்கு உத்தரகிரியையும் செய்ய வேண்டியதில்லை. வெட்கமற்ற ஸ்திரீயே, என் சத்துருவே, புருஷனை இழந்து விதவையாகி உன் மகனுடன் ராஜ்யத்தைச் சந்தோஷமாக அனுபவிப்பாயாக.

''ஹா! ராமனைக் காட்டுக்கு அனுப்ப வேண்டுமா? ஆஹா! ஸ்திரீகளுடைய சுபாவம் எவ்வளவு பாவ சுபாவம்! எவ்வளவு கொடியவர்கள்! இல்லையில்லை. இவள்தான் கொடியவள். மற்றவர்களை ஏன் நான் நிந்திக்க வேண்டும்? பரதன் தனக்குத் தாயாக இவளைப் பெற்றானே? ஒரு நாளும் என்னால் இது செய்ய முடியாது. கைகேயி! உன் காலைப் பிடித்துக் கேட்டுக் கொள்ளுகிறேன். கொஞ்சம் இரக்கம் காட்டு'' என்று கதறிக்

## ஒரு திருத்தம்

22—6—69 கல்கி இதழில் ராமாயணத்தில் பக்கம் 28ல் முதல் பத்தி கடைசியில், பரசுராமர் கூறுவது: ''......என் தந்தை ஜமதக்னி அடைந்த விஷ்ணு தனுசு இது. இதை வளைத்து நாண் ஏற்று வாய். பாணமும் தருகிறேன். இதைச் செய்யாயேல் நாம் இருவரும் யுத்தம் செய்வோம்'' என்றார். ''இதைச் செய்யாயேல்'' என்பது ''இதைச் செய்தாயேல்'' என்று இருக்க வேண்டும்.

கொண்டு தசரதன் கீழே தரையில் புரண்டான்.

* * *

மகாராஜாவாகப் பல்லாண்டுகள் ராஜ்ய பரிபாலனம் செய்து பெரும் கீர்த்தியைப் பெற்ற தசரத சக்கரவர்த்தியானவன் பூமியில் புரண்டு அழுது கொண்டு மனைவியின் பாதங்களைப் பிடித்து இறைஞ்சும் நிலையை என்னென்று சொல்வது! சம்பாதித்த புண்ணியம் தீர்ந்ததும் யயாதி சுவர்க்கத்திலிருந்து அப்புறப்படுத்தப் பட்டுப் பூமியில் வீழ்ந்த காட்சியாக இருந்தது அது.

மகாராஜன் எவ்வளவு வணங்கி எவ்வளவு தீனமாகக் கேட்டுக் கொண்டும் கைகேயி பிடிவாதமாக, ''நீர் சத்திய சந்தர், சொன்ன சொல் தவறாதவர் என்று இவ்வளவு நாள் எல்லோரிடமும் பறைசாற்றி வந்தீர். தெய்வங்கள் சாட்சியாக எனக்கு வரம் தந்துவிட்டு அதைப் புறக்கணிக்கப் பார்க்கிறீர். நீர் வார்த்தை தவறினால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன். இது நிச்சயம்'' என்று முடிவாகச் சொல்லி விட்டாள்.

''அப்படியானால், பாவி, ராமன் வனம் போவான். நான் சாவேன். நீ எனக்கும் என் குலத்துக்கும் பகையாகி, உன் விருப்பத்தை அடைந்து என்ன சுகமடைய வேண்டுமோ அதை அடைவாயாக'' என்றான் தசரதன்.

மறுபடியும் ''ராமனைக் காட்டுக்கு அனுப்பி நீ என்ன பிரயோஜனத்தைப் பெறுவாய் என்பதை நான் அறியவில்லை. உலகம் முழுவதும் உன்னை இகழ்வதைத் தவிர வேறொரு பிரயோஜனமும் நீ அடையப் போவதில்லை. புத்திரப் பேறு இல்லாது பல்லாண்டு வருந்தி, பிறகு ஆண்டவன் அருளால் ராமனை அடைந்தேன். அவனை இப்போது காட்டுக்கு அனுப்புகிறேன்.




**பஸ் க்விஸ்**

நாள் தவறாமல் பஸ் பிரயாணம் செய்கிறோம். சென்னை நகரில் ஓடும் பஸ்களின் 'ரூட்' எண்களையும் அவை எங்கிருந்து எங்கு செல்கின்றன என்ற அறிவிப்புப் பலகையையும் நாம் பார்ப்பதுண்டு. பஸ்ஸின் உட்புறம் உள்ள திருவள்ளுவர் படத்தையும் குறளையும் கூடப் பார்க்கிறோம். ஆனால் பஸ்ஸின் வெளிப்புறத்தில் முன் பக்கத்திலும் பின் பக்கத்திலும் ஒரு சிறிய வட்டம் 'பெயின்ட்' செய்யப் பட்டிருப்பதையும் அந்த வட்டத்தினுள் சில எழுத்துக்களும் இலக்கங்களும் உள்ளதையும் கவனித்திருக்கிறீர்களா?

இந்த எழுத்துக்களும் இலக்கங்களும் எதைக் குறிக்கின்றன? (விடை 45ம் பக்கம்)

ஆஹா! என்ன பாக்கியத்தைப் பெற்றேன்!'' என்று கிழ அரசன் அழுதான்.

பிறகு அவன் ஆகாயத்தை நோக்கி, ''ஹா நிசியே, நீ தீர்ந்து பொழுது விடிந்து விட்டால் நான் என்ன செய்வேன்? பட்டாபிஷேகத்தை எதிர் பார்த்திருப்பவர்களுக்கு என்ன சொல்வேன்? ஆகாயமே! நட்சத்திரங்களுடன் எனக்காக அப்படியே நிற்பாய்! ஐயோ! வேண்டாம். அப்படியானால் இந்தப் பாவியின் முகத்தில் விழித்துக் கொண்டே இருக்க வேண்டியதாகும்! சீக்கிரம் தீர்ந்து போவாய் நிசியே! விடிந்தால் இவள் முகத்தைப் பார்க்காமலிருக்கலாம்'' என்று இவ்வாறு பேசிக் கொண்டு உன்மத்த நிலையும் மூர்ச்சையுமாக மாறி மாறி வேதனைப் பட்டான் அப்பாவி தசரதன் — அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்டு முதுமையடைந்த பேரரசன்.

''என்மேல் இரக்கம் கொள்வாய் கைகேயி! நான் கோபம் கொண்டு சொன்னதை யெல்லாம் மறந்துவிடு. உனக்கு என்பேரிலிருந்த அன்பை வைத்துக் கேட்டுக் கொள்கிறேன். ராஜ்யம் உனக்குத் தந்தேன் என்றே வைத்துக் கொண்டு ராமனுக்கு அதை நீ உன்னுடையதாக உன்னுடைய கையால் கொடுத்து நாளை நடக்க வேண்டிய பட்டாபிஷேகம் நடைபெறும்படி செய். நாளை ராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று ராஜ சபையில் தீர்மானித்துப் பெரியோர்களுக்கும் ராமனுக்கும் நான் சொன்னதைப் பொய்யாக்க வேண்டாம். என்மேல் இரக்கம் கொள். ராமனுக்கு நீயாகக் கொடு ராஜ்யத்தை. உலகமுள்ளவரையில் நிற்கும் பெருங் கீர்த்தியை அடைவாய். என் விருப்பம், ஜனங்களின் விருப்பம், பெரியோர்களின் விருப்பம், பரதனின் விருப்பம், எல்லாமும் இதுவேயாகும். இதைச் செய்வாய் என் உயிரே, என் காதலியே!'' என்று மறுபடியும் அரசன் கொடிய கைகேயியைக் காலைப் பிடித்து வேண்டிக் கொண்டான்.

''முடியாது. கொடுத்த வரத்தைப் பொய்யாக்காதீர். சத்தியம் சத்தியம் என்று பேசிக் கொண்டிருந்து, ஏன் இப்போது அசத்தியத்தில் புகப் பார்க்கிறீர்? அப்படிச் செய்தீரானால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன். அறிவீர். வீண் கால தாமதம் வேண்டாம்'' என்றாள் கைகேயி.

* * *

''மந்திரத்துடன் கையைப் பிடித்துத் தீயின் முன் உன்னைக் கொண்டேன். இப்பொழுது உன்னை நீக்கினேன். எனக்கும் உனக்கும் பிறந்த மகனையும் நீக்கி விட்டேன். இரவு தீர்ந்து, பொழுது விடியப் போகிறது. பட்டாபிஷேகம் இல்லை. ராமன் எனக்கு உத்தரக் கிரியை செய்வான்'' என்றான் அரசன்.

''வீணாகப் பிதற்றிக் கொண்டிருக்கிறீர். ராமனுக்குச் சொல்லியனுப்பி அவனை இங்கே உடனே வரவழைக்கவும். பரதனுக்கே ராஜ்யம் என்று சொல்லி அவனை வனத்துக்கு அனுப்பிச் சத்தியத்தைக் காப்பாற்றவும். தாமதம் செய்ய வேண்டாம்'' என்றாள் கைகேயி.

''அப்படியா?'' என்றான் அரசன். ''சரி, என் மகன் முகத்தையாவது பார்ப்பேன். நான் இறப்பது நிச்சயம். உடனே அவனை வரச் சொல். இறப்பதற்கு முன் அவன் முகத்தையாவது பார்ப்பேன். சத்தியம் என்கிற கயிற்றினால் கட்டப்பட்ட இந்த மூடக் கிழவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை'' என்று தீன சுரத்தில் சொல்லிவிட்டு மறுபடியும் நினைவு இழந்தான். (தொடரும்)

இந்திரா பார்த்தசாரதி எழுதும்

# வேஷங்கள்

"உலகம் நமக்கெல்லாம் சொந்தமில்லே. சில பேருக்குத்தான். எனக்கு இல்லே. உங்களுக்கு இல்லே. எங்கம்மாவுக்கு இல்லே. எங்க அப்பாவுக்கு......
அதோ நாயர் ரிக்ஷாவிலே ஓடறானே, அந்தப் பையனுக்கு......"









# பக்கத்து வீட்டுப் பிரமுகர்

ஆகஸ்ட் 3

**கல்கி** இதழில்

ஆரம்பமாகின்றன.

# அசைந்தாலே
# வேகம் துள்ள, அலுப்பில்லா
# உற்சாகம் கொள்ள...

சளைக்காத சக்திபெற... சாதனை புரிய... சலிப்பூட்டும் இன்றைய வாழ்வையும் இன்பமாக்க... வீறுகொண்டு எழுவீர்! உள்ள முங்கிக் கிடக்கும் உங்கள் தெம்பை விடுவித்தால்... அதுவே வெற்றி! இதோ, அதற்கென்றே பிறந்துவரும் அமிர்த யோக வாய்ப்பு: அஸ்டரா என்ற ஒரு பாலமுத பானம். இந்தியாவில் உணவியல் ஆராய்ச்சியிலே முன்னிற்கும் ஒரு நிலையத்தின் சிபாரிசு பெற்ற 4 டானிக் சத்துக்கள் இணைந்த ஒரு சக்திக் களஞ்சியம்! காலைதோறும் நாவாரப் பருகுவீர் அஸ்டரா. ஊக்கத்தின் உதயகீதம், நாள் முழுதும் சுறுசுறுப்பின் லயம்!

**உள்ளுறங்கும் தெம்பை உயிர்த்தெழுப்புவது**

## அஸ்டரா




தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், ஆந்திர, மைசூர் மாநிலங்களிலே தேர்ந்தெடுத்த சில நகரங்களிலும் கிடைக்கிறது

லின்டாஸ்-AST 3.140 TM இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு (ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்)

# திருப்புகழ் ராகவன்




தித்திக்கும் தேனமுதத் தெவிட்டாத திருப்புகழைப் பருக வேண்டுமா? வாருங்கள் இந்திரப்பிரஸ்தத்துக்கு. கேளுங்கள் ராகவனின் கோஷ்டியை !

அருணகிரிநாதர், அவர் பட்ட அல்லல்களுக்கெல்லாம் திருப்புகழ் மூலம் வஞ்சம் தீர்த்துக் கொண்டிருக்கிறார். ஏழரை, ஒன்பதரை, பதினொன்றரை, ஏன்! பதினேழு கூட அவர் புனைப்புக்களில் இடம் பெற்றுள்ளன. ஒரே கணக்கு வழக்கு. ஸௌலப்யமாகப் பாடுகிறவர்கள் துர்லபம். அக்ஷரங்களைக் கவனித்தால் சாகித்யம் உருத்தெரியாமல் போய்விடும். ஒரு மாத்திரையை மறந்தால் 'அடியைப் பிடியடா பாரத பட்டா' என்று அடியிலிருந்து தொடங்கி ஒரு முழுச் சுற்று வரவேண்டும். திருப்புகழில் உள்ள தாள விந்நியாசங்களைக் கரைத்துக் குடித்துவிட்டால் லயத்தைப் பற்றிப் பயமே வேண்டாம்; புகுந்து விளையாடி விடலாம்.

அடடா, மறந்து விட்டோமே ராகவனை !

ராகவன் நல்ல உயர்தர கர்நாடக சங்கீத வித்வான். மூன்று மணி நேரம் கச்சிதமாகக் கச்சேரி செய்யக் கூடியவர். திடீரென்று 1957ல் அவருக்கு வயிற்றுவலி கண்டது. டாக்டர் சொன்ன முதல் நிபந்தனை, ''பாடுவதை நிறுத்து'' என்பதுதான். ஆனால் அது அவரால் முடியாத காரியம்.

வேளூரானைத் தரிசித்து வந்தார். சற்றே குணம் கண்டது. அவன் புகழ் பாடத் திருப்புகழை மேற்கொண்டார்.

1958ல் மூன்றே பேர்களுடன் திருப்புகழ் வகுப்புத் தொடங்கினார். ஒரே வருஷத்தில் கோஷ்டி ஐம்பதாகப் பெருகியது. இன்று 108 கவனங்களையும் பாடச் சுமார் இருநூறு பக்தர்கள் இருக்கிறார்கள். முக்கியமாக அதில் பெரும்பாலோர் பெண்மணிகள். அந்தப் பெரும்பான்மையில் முக்கால்வாசிக்கு மேல் தாய்மார்கள். பாடல்களுக்கு அருமையான வர்ண மெட்டுக்கள் அமைத்துள்ளார். நல்ல கர்னாடக பாணி. சாகித்யம் சிதைவுபடாமல் நல்ல கமகக் கார்வைக் குழைவுகளுடன் அவர்கள் பாடும்போது ஏழரை, ஒன்பதரை, பதினொன்றரை, பதினேழு எல்லாம் பிரக்ஞையில் வருவதில்லை. தாளம் பாவத்தில் கரைந்து விடுகிறது. இந்தக் கோஷ்டி இரு முறை அறுபடை வீடுகளை வலம் வந்துள்ளது. நாற்பது பேர்கள் அடங்கிய இந்தக் குழுவில் எல்லோரும் நல்ல உத்தியோகங்களில் இருப்பவர்கள்.

பாடும்போது நல்ல கட்டுப்பாடு: ஒழுங்கு. மூலைக்கொருவராகக் கத்துவதில்லை. சுருதியுடன் இசைந்த நல்ல பொடி ஜாலராவை ராகவன் தட்டிய நிமித்தம் அங்கே சாந்நித்யம் வந்து விடுகிறது.

குழுவின் பரம பக்தர் திரு சிங்காரவேலு அவர்கள். ஆறுமுகனின் ஆன் படை வம்சத்தில் உதித்தவர். சேனாதிபதி. தில்லி தீப்படையின் தலைமை அதிகாரி. தீரர். கிருத்திகை தோறும் அவர் வீட்டில் ராகவன் பஜனை. உத்தியோகத்துக்கும் இந்தப் பற்றுக்கும் ஒரு விதத்தில் சம்பந்தம் இருக்கிறது. மனிதனின் சரீரத்தில் உள்ள காமத் தீ, குரோதத் தீ, மோகத் தீ, லோபத் தீ, மாச்சரியத் தீ இவைகளைத் தணிக்கத்தானே திருத்தணிகை முருகனை வழிபடுகிறார் !

ராமநாதபுரம் ஈசுவரன் நல்ல மிருதங்க விற்பன்னர். ஆனால் அவருக்கு ஈசுவரனிடமுள்ள நம்பிக்கையை விட ரிஸர்வ் பாங்க் கவர்னர் எல். கே. ஜாவின் கையெழுத்தில்தான் அதிக நம்பிக்கை. ஆனால் ராகவன் விஷயத்தில் காலணா வாங்கிக் கொள்ளாமல் ஒரு பஜனை விடாமல் கைங்கர்யம் செய்திருக்கிறார். தமக்குச் சோறு போடும் மிருதங்கத்துக்குச் 'சோறு' போடுவதற்குக் கூடப் பணம் வாங்குவதில்லை.

கஷ்டமான இலாகாவாகிய (அதாவது மற்றவர்களுக்குக் கஷ்டம் தரும்) கஸ்டம்ஸ் இலாகாவில் உயர் அதிகாரியான திரு சரவணனை இங்கு தவறாமல் காணலாம். துறைமுகத்திலும் விமானக் கூடத்திலும் வருபவர்களைத் தடுத்தாட் 'கொள்ளும்' இவரை ஆறுமுகன்தான் தடுத்தாட் கொள்வான் என்று நம்புகிறார் போலும்.

ராகவன் ஒரு வெள்ளைக்காரக் கம்பெனியில் உயர் பதவி வகிக்கிறார். அம்மாதிரிப் பதவிகளில் இருப்போருக்குத் தலைநகரில் பொழுதுபோக்கப் பல வசதிகள் இருக்கின்றன. 'கோழிவால் பார்ட்டி' கோல்ப், ரம்மி, இத்தியாதி. இப்பேர்ப்பட்ட சூழ்நிலையில் அவர் அவ்வழிக்குப் போகாமல், இறைவன் திருநாமம் பாடுகிறார்.

பக்தி பூர்வமாகப் பார்த்தாலும் சங்கீதத் தராசில் எடை போட்டாலும் ராகவன் தொண்டு மகத்தானது. சந்தேகமேயில்லை.


புதிய ஓர் உலகம்! அதை விண்கலம் மெல்ல நெருங்கிக் கொண்டிருந்தது!


கோபி! அது என்ன கிரகமாக இருக்கலாம்?
யாருக்குத் தெரியும்? இனி விண்கலத்தை மிக எச்சரிக்கையோடு அதில் இறக்க முயல வேண்டியதுதான்!


பிரபாகர்! அங்கு நாம் உயிரோடு சென்று இறங்கினாலும் உயிர்வாழ ஏற்ற சூழ்நிலை அங்கு இருக்குமோ, தெரியாது! எனினும் முயன்று பார்ப்பதில் தவறில்லை, ஆனால்...
ஆனால் என்ன கோபி?


நீ மட்டும் அசட்டுப் பிசட்டென்று எதையாவது செய்து வைக்கக் கூடாது. சொன்ன காரியத்தை நிறைவேற்ற உதவியாக இரு!
எனக்கும் புத்தி வந்து விட்டது கோபி! இனி நான் சரியாக நடந்து கொள்வேன்!


ஆல் ரைட்! 'Z' கதிர்களைச் செலுத்தி இன்னும் அந்த உலகை அடைய எவ்வளவு தூரம் இருக்கிறது என்று கணக்கிடு! அந்தக் கிரகத்தைச் சூழ்ந்துள்ள வாயுமண்டல அடுக்குகளையும் அதன் புவி ஈர்ப்புச் சக்தியையும் அறிந்து வரக் கருவிகளுடன் கூடிய தானியங்கி ஏவுகணையை அனுப்பு!


கோபியும் பிரபாகரும் இணைக்கோளைச் செயலாற்றி அந்தப் புதிய உலகில் இறங்க ஆயத்தமாயினர். விண்கலம் அந்தக் கிரகத்தை நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருந்தது.
தொடரும்.....

# நல்லூரில் நாவலர் விழா





இலங்கை வரலாற்றிலே பொற்காலம். பொன்னான எழுத்துக்களால் பொறிக்க வேண்டிய புண்ணிய நிகழ்ச்சி. கொழும்பு நகர வீதியிலே தமிழ் மக்கள் இதயம் இனிக்க இன்ப நாதம் எழுந்தது.

வீதியெங்கும் மகர தோரணங்கள். வாழைமரங்கள்; வாழ்த்துச் சிலைகள்! அழகு நகர் கொழும்பு வீதியிலே, தமிழுக்காக வாழ்ந்து தமிழ்ப் பணி செய்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் சிலை சிங்கார வண்ண ஊர்தியிலே பவனி வந்தது கோலாகலமான காட்சி! நெஞ்சைத் தொட்ட நிகழ்ச்சி.

நாவலருக்குத் தமிழர்கள் மட்டுமல்லாது மற்றவர்களும் கூடி நின்று அஞ்சலி செய்தார்கள். மலர் மாலை சூட்டினர். நறுமண மலர் தூவி வணங்கினர்.

நாவலர் பெருமான் பிறந்த நாட்டால் இலங்கையர்; வளர்ந்த நாட்டால் இலங்கையர்; இம் மண்ணுக்குரியவர். இருந்தும் இப் பெருமை இலங்கைக்கு மட்டும் சொந்தமில்லை. எங்கெங்கு தமிழர்கள் வாழ்கிறார்களோ அந்தந்த மாநிலங்களுக்கும் நாவலர் உரியவர்.

தமிழர்களின் உள்ளங்களிலே நாவலரின் அழகுத் தமிழ் கோயில் கொண்டிருக்கிறது.

தமிழுக்கும் சைவத்துக்கும் துன்பம் ஏற்பட்ட சோதனை மிகுந்த தருணத்திலே நாவலர் என்ற மணிவிளக்கு இலங்கையில் ஒளிவீச ஆரம்பித்தது. அந்த ஞானப் பழத்தின் வடிவில் ஒளிமயமான எதிர்காலம் தமிழர்களுக்கு உதயமாகப் போகிறது என்ற உணர்வு அப்போது தோன்ற ஆரம்பித்தது.

சிங்கம் போல் தமிழர் மானம் காக்க உரிமைக் குரல் எழுப்பினார். சிங்காரத் தமிழில் மதத் தத்துவங்களும் விளக்கங்களும் எழுதினார். எளிமையான நடையிலே அனைவருக்கும் புரியும்படி நூல்களை வடித்தார். பிழையற்ற தமிழ் வசன நடைக்கு வழிகாட்டியாக விளங்கினார்.

இத்தகைய பெருமகனுக்கு நல்லூரில் சிலை வைத்து நடத்திய விழா வரலாற்றிலே இடம் பெறத்தக்கதாக அமைந்து விட்டது.

கொழும்பு நகரிலிருந்து யாழ்ப்பாணம் வரை ஊர்வலமாக வந்தது நாவலர் சிலை. இச்சிலை வழியனுப்பு விழா கொழும்பில் நடந்தபோது, இலங்கைப் பிரதமரும் மொழி வேறுபாடின்றிப் பல தலைவர்களும் கலந்து கொண்டு நாவலர் தமிழுக்கு ஆற்றிய சேவையைப் பாராட்டிப் புகழ்ந்தார்கள்.

இப் புனிதமான செயலுக்கு முன் நின்ற பெருமை செனட்டர் நடேசராஜாவுக்கும் ஸ்ரீ இரத்தினசபாபதிக்கும் உரியது. இவர்களின் பெரு முயற்சியில் இவ்விழா களை கட்டியது.

இளம் கலைஞர் திரு மணியின் உளி முனையிலே உருவான நாவலர் சிலை, நல்லூரில் வைக்கப்பட்டுள்ளது.

இந்தச் சிலை திறப்பு விழா வைபவத்தில் மதுரை ஆதீன ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர பரமாசார்ய சுவாமிகள் கலந்து கொண்டு ஆற்றிய உரை மகுடமாக அமைந்தது.

புகைப்படங்களும் செய்திச் சுருக்கமும்:

கே. வி. எஸ். மோகன்

# நாவலர் நற்புகழ் நாற்றிசையும் பரவுக!

ஈழத்தின் தேசப் படத்தின் அமைப்பைப் பார்க்கும் போது யாழ்ப்பாணம் அதனின் தலை உறுப்பாய் அமைந்திருப்பது போல் காட்சியளிக்கிறது. எங்கு தலையுண்டோ அங்கு மூளையுமுண்டு என்பது பொருள். இக் கருத்துப்பட ஈழத்தின் தலை உறுப்பாய் விளங்கும் யாழ்ப்பாணம், காலத்துக்குக் காலம் நாட்டைப் பல்துறையில் வழி நடாத்தும் மூளை வளம் படைத்த தலைவர்களைத் தோற்றுவித்துள்ளது. இதனால்தான் போலும் சில காலத்துக்கு முன் ஒரு மூதவை உறுப்பினர் பின்வருமாறு கூறினார்: "When others grow their grains we grow our brains" (மற்றையோர் தானியங்களை வளர்க்க யாம் எம் மூளையை வளர்க்கிறோம்). வரலாறுகள் கொண்டு பார்க்கும்போது ஏறக்குறைய இதுவரை குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் உடைய 75 பல்துறை அறிஞர்களை யாழ்ப்பாணம் உருவாக்கியுள்ளது. ஒவ்வொருவருடைய பணியும் தனிச் சிறப்புடையதெனினும் ஆறுமுக நாவலர் தன்னகத்தே பல சிறப்பியல்புகளைக் கொண்டு தமிழ் இனத்தின் மிக நெருக்கடியான காலத்தில் தோன்றித் தமக்கெனத் தனி வழி வகுத்துப் பணியாற்றியதால் அவர் நாமம் மக்கள் நாவில் நிலைத்து விட்டது. 1822 டிசம்பர் 18ல் தோன்றிய நாவலர் 5-12-1879ல் தமது ஐம்பத்தேழு வயதை எட்டிப் பிடிக்கையில் தம் வாழ்வை முடித்துக் கொண்டார். அவர் இன்று மறைந்து தொண்ணூறு ஆண்டுகள் ஆகின்றன. ஆம்! ஒரு நூற்றாண்டை எட்டிப் பிடிக்கும் அளவுக்குக் காலம் கடந்து செல்கிறது. ஆனால் அவர் நினைவு மட்டும் கால வெள்ளத்தில் அழுந்தாது அந்த வெள்ளத்தில் மிதந்து நம் உள்ளத்தில் ஒளிவிடுகிறார். இதுவொன்றே அவரின் பணியின் பாங்கினைப் பாரினுக்குப் பறைசாற்றப் போதிய சான்றாய் அமைகிறது.



## நாவலரின் பிறப்பிடம்

யாழ்ப்பாணத்தின் தலைநகராய் விளங்கிய நல்லூர், மணிமுடி தாங்கிய மன்னர் ஆண்டதனால் மட்டும் பெருமையுடையதல்ல. மணிமுடி தாங்கிய மன்னரோடு தமிழ் அன்னைக்கு இலக்கிய அணிகள் அணிவித்த அறிஞரைத் தோற்றுவித்ததாலும் சிறப்புப் பெறுகிறது. அரசர் அரசகேசரி தொட்டுச் சொற் கலை வல்லுநர் நல்லூர் ஞானப் பிரகாசர் (அருள் ஒளியாளர்) ஈறாகத் தமிழ் வளர்த்த சான்றோர் பலர் நல்லூரிலேயே தோன்றினர். இந்த நல்லூர்தான் நாவலரின் பிறப்பிடம்; நற்றமிழ் வளர்ப்பிடம்.

## அன்றைய யாழ்ப்பாணம்

நாவலர் தோன்றிய காலத்தில் தமிழ் மக்கள் மொழியில் ஆங்கிலத்துக்கும், நெறி

○ நாவலர் சிலை திறப்பு விழாவுக்காக மதுரை ஸ்ரீ திருஞான சம்பந்தர் ஆதீன குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோம சுந்தர பரமாசார்ய சுவாமிகள் யாழ்ப்பாணம் வந்தபொழுது உரிய மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார்.

○ அலங்கார ஊர்தியிலே நாவலர் சிலை கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்துக்குச் செல்கிறது.

○ நாவலர் சிலை.

○ இலங்கைப் பிரதமர் திரு டட்லி சேனநாயகா நாவலர் சிலைக்கு மலர் மாலை அணிவிக்கிறார்.



யில் கிறித்தவத்துக்கும், பண்பாட்டில் மேல் நாட்டு வாழ்க்கை முறைக்கும் அடிமையாகித் தம் நிலை கெட்டுத் தாம் ஒரு தாயினமாக வாழ முடியாத நிலையில் தத்தளித்தனர். அன்று அரசாண்ட ஆங்கிலேய இனத்தின் மனப் போக்கிற்கமைய எம் முன்னோரின் மனப் போக்கும் மாறத் தொடங்கியது. நாவலர் காலத்தில் வாழ்ந்த தமிழர் பலர் 'யாம் உண்டு, எம் குடும்பம் உண்டு; எம் வயிறு நிறைந்தாற் போதும்' என்ற உள்ளப் போக்கோடு வாழ்ந்தனர். வழி தவறிச் சென்ற இவர்கள் வாழ்க்கையை வழிப்படுத்திச் செம்மையுறச் செய்தவர் நம் நாவலர்.

## பிற மதத்தினர் கையாண்ட வழிகளிலேயே வெற்றி கண்டார்!

கிறித்தவ மதத்தினர் என்னென்ன வழிகளைக் கையாண்டு தம் மதத்தைப் பரப்பினரோ அதே வழிகளை நாவலரும் கைக்கொண்டு சைவத்தைப் பரப்பினார். கிறித்தவ மதத்தினர் தம் கொள்கைகளைப் பரப்பச் சிறு சிறு புத்தகங்களை வெளியிட்டனர். அச்சகங்களை உருவாக்கிப் பள்ளிக்கூடங்களைத் தோற்றுவித்தனர். நாவலரும் உங்களுக்கு யான் குறைந்தவன் அல்ல என்று கூறுவது போல் அவர்கள் ஈடுபட்ட அதே துறைகளில் ஈடுபட்டுச் செந்தமிழை ஊட்டிச் சிவநெறியைப் பரப்பினார். அதோடு செய்யுள் நடையை விடுத்து மக்களுக்குப் புரியும் முறையில் எளிய வசன நடையில் குறியீடுகளோடு நூல்களை வெளியிட்டார். குறியீடு முறை தமிழுக்குப் புதிது எனினும் தமிழை வளப்படுத்த அது துணை புரிந்ததால் அதனை ஏற்றார் நாவலர்.

## நாவலரின் அரசியல் பணி

மொழிப் பணியும், சமயத் தொண்டும் ஆற்றிய நாவலர் அரசியலைத் துறந்தார் இல்லை. அரசியலில் அறம் நிலைத்தால்தான் வாழ்வில் நிலையான ஆக்கம் காண முடியும் என்பதை நாவலர் உணர்ந்தார். அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் என்பதற்கமைய ஆளுகின்றவரின் உளப் பாங்கை ஆளப்படுவர் ஏற்பர் என்பதை நாவலர் கண்டார். இவர் காலத்தில் இளைஞர் ராமநாதனுக்கும் முதிர்ந்த வழக்குரைஞர் பிரிட்டோ அவர்களுக்கும் 1879ஆம் ஆண்டுக்குரிய சட்டசபைத் தேர்தலில் போட்டி ஏற்பட்டது. இதில் பிரிட்டோ அவர்கள் வெல்லும் அறிகுறி கூடத் தென்பட்டது. ஆனால் நாவீறு படைத்த நாவலர் அவர்களோ இராமநாதன் அவர்கள்தான் தமிழரைத் தக்க வழியில் வழி நடாத்தத் தகைமை உடையார் என்பதை உணர்ந்து தம் தொய்வு நோயையும் பொருட்படுத்தாது பல கூட்டங்களில் அவர் சார்பில் குரல் எழுப்பினார். அவருக்கு வெற்றி வாகையும் சூட்டினார். நாவலரின் நல் வாழ்த்தோடு அரசியலில் புகுந்த இராமநாதன் ஈழத்துக்கும் குறிப்பாக ஈழத் தமிழ் இனத்துக்கும் அரை நூற்றாண்டாக ஆற்றிய பணி அளவிடற்கரியது. அது காலத்தை வென்று ஞாலத்தில் என்றும் நிலைத்து நிற்கும் சாலச் சிறப்புடைய பணி என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது.

## சமூகப் பணி

நாவலரின் மாணவர் ஒருவர் அம்மை நோயினால் வருந்திய பொழுது அவரை அடிக்கடி சென்று பார்வையிட்டு ஆவன செய்து ஆறுதல் மொழி கூறியவர் நம் நாவலர். உங்களுக்கு இந்நோய் தொற்றிவிடும் என நாவலரின் நண்பர்கள் அவரை எச்சரித்த போதும் நாவலர் தம் கடமை உணர்ச்சியில் இருந்து பின் வாங்க மறுத்தார். அது மட்டுமல்ல, நாவலரின் இறுதிக் காலத்தில் யாழ்ப்பாணத்தில் பேதி நோய் (Cholera) ஏற்பட்டு மக்கள் துயர் உற்ற காலத்தில் அரசாங்க அதிபர்களோடு வாதிட்டு மக்கள் நலம் கருதிப் பாடுபட்ட நாவலரின் தொண்டுள்ளத்தை யாம் எளிதில் மறக்க முடியாது.

## செந்தமிழ்ச் சிவநெறிப் பணி

செந்தமிழ் மக்கள் சிவநெறியிலிருந்து புறநெறி புகாதிருக்கக் கல்வி அறிவு வேண்டும் என்பதை நாவலர் நன்கு உணர்ந்தார். தம் சிந்தனையைச் செயலாக்கும் முறையில் யாழ்ப்பாணத்திலும் சிதம்பரத்திலும் கல்லூரிகளை நிறுவினார். அச்சுப் பொறி நிலையங்களைத் தோற்றுவித்து சமய, இலக்கிய, கண்டன நூல்களை எழுதி வெளியிட்டார். சைவ வினாவிடை, பெரிய புராண வசனம், திருவிளையாடற் புராண வசனம், நன்னூற் காண்டிகையுரை, பால பாட நூல்கள், இலக்கணச் சுருக்கம், சுப்பிரபோதம் முதலியவை அவர் எழுதிய நூல்களுள் ஒருசிலவாகும். இவை தவிர செல்லுக்கு இரையாகாது பதிப்பித்த பழந் தமிழ் நூல்களும் பலவாகும்.

## அவர் வாழ்வின் குறிக்கோள்:

“ஒவ்வொரு கோயிலிலும் சைவ சமயத்தை மக்களுக்குத் தாய்மொழியிலேயே போதித்தல் வேண்டும் என்று காமிகாமத்தில் இறைவனால் விதிக்கப்பட்டிருக்கிறது” என்று வலியுறுத்தித் தமிழ்மொழி வழிபாட்டுக்கு வழிகோலியவர் — வித்திட்டவர் நாவலர். அவர் வீடுதோறும் சென்று பிடி அரிசி பெற்று அது கொண்டு தென்னகத்திலும், ஈழத்திலும், பள்ளிகளும், அச்சுக் கூடங்களும் நிறுவிப் பண்பாட்டுப் பாலம் அமைத்து ஓயாது உழைத்தார்.

## நாவலரின் நாவன்மை

நாவலரின் பல்துறைப் பணி பாங்கொடு விளங்கியதற்கு அடிப்படைக் காரணம், அவரின் உள்ளத் தூய்மையே. உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின் வாக்கினில்

'வைபோக வனப்பை
எனக்கு வாரிவழங்குவது
புதிய லக்ஸ்'

என்கிறார் சினிமா நட்சத்திரம்

**காஞ்சனா**




உயர்தரப் புதுமணமும் சர்வதேசப்
புதுமைக் கோலமும்
பூண்டது புதிய லக்ஸ்.
நீங்களே கண்டுகொள்ளுங்கள்...

**வைபோகமான வனப்புக்கு ஓரே ஒரு சோப் : லக்ஸ்**

லின்டாஸ்-LTS.229-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு




## பரவசமாக்கும் பரிமளகந்தம்-பிளாக் ரோஸ்
## கோயா தயாரிக்கும் ஒரு அழகு சாதன பௌடர்

கோயா பிளாக் ரோஸின் சுகந்தச் சுழலில
அகப்பட்டுக்கொள்ளுங்கள். நீங்கள் வெளிவரும்
போது பெண்மை சிறக்கும். வாசனை மணக்கும்.
உள்ளம் உவக்கும். எல்லாம் நீங்கள் விரும்பிய விதமே
இங்கிதமறிந்த மங்கை எந்தப்பணிக்கும் தயார்.
மூன்று இதர கோயா சிருஷ்டிகள்: புதிய சிருங்கார
சாதனம் லவ் அ:பேர், புது மலர் மணமுள்ள
கார்டீனியா, பரவசமூட்டும் பாஸ்போர்ட்.
-ங்களை நாள் முழுவதும் குளுமையுடனும்
ணர்ச்சியுடனும் வைத்திருக்கும்.

இந்த நறுமணப் பௌடர்களைத்
தயாரிப்போர்: **கோயா**



பாரிஸ் . லண்டன் . நியூயார்க்

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்)
லிமிடெட் (இங்கிலாந்தில்
இணைக்கப்பட்டது)

AGC-8 TAM

ஒளி உண்டாகும் என்ற பாரதியின் கூற்றும் இதனையே வலியுறுத்துகிறது. தூய்மையான உறுதி வாய்ந்த உள்ளத்தோடு நாவிறு படைத்த நாவலர் பேசிய பேச்சுக்கு மக்களிடையே தனி மதிப்பு ஏற்பட்டது.

நாவலரின் சொல் கேட்க விழைந்தோர் உணர்ச்சியினால் உந்தப்பட்டுச் செயல் வீரராக மாறிச் செந்தமிழையும் சிவநெறியையும் சிறப்புறச் செய்தனர்.

## உரைநடையின் உயர்வு

நாவலரின் உரைநடை தனித் தன்மை வாய்ந்தது. தமிழில் உரைநடைக்கு வழிகோலியவர்களுள் குறிப்பிடத்தக்க முதன்மை பெற்றவர் நாவலர். நாவலரின் உரைநடையின் உயர்வை யாழ்ப்பாண மண் வளம் பாடிய சோமசுந்தரனார் பின்வருமாறு சுவை சொட்டச் செப்புகிறார்:

**அன்னநடை பிடிநடை மழகுநடை**
**யல்லவென வகற்றி யந்நாட்**
**பண்ணுமுது புலவரிடுஞ் செய்யுணடை**
**பயின்ற தமிழ்ப் பாவை யாட்கு**
**வன்னநடை வழங்குநடை வசனநடை**
**யெனப் பயிற்றிவைத்த வாசான்**

புலவன் புகன்றதற்கமைய நாவலரின் உரை நடையில் எளிமை, இனிமை, பொருட்தெளிவு ஆகிய பண்புகள் உண்டு. ஆனால் இக்கால அறிஞர் வரவேற்கிற அளவு மொழித் தூய்மையை நாவலரின் உரை நடையில் காண்பது அரிதுதான். எனினும், நாவலர் வாழ்ந்த அக்காலத்தில் மொழியின் தூய்மையை வற்புறுத்துகிற கொள்கை நிலவாததினால் அதை ஒரு பெரும் குறையென்று கூற முடியாது. நாவலரின் உரை நடையில் வடசொற்களும் ஏனைய பிறமொழிச் சொற்களும் விரவி வரினும் இயன்ற அளவு இவை தமிழின் ஒலி அமைப்புப் பெறும் முறையில் தமிழ் வடிவுபெற மாற்றி அமைத்த பெருமை நாவலருக்குரியது.

## நாவலர் வாழ்த்தும் நாவலர்

"யாழ்ப்பாண நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் ஓர் அவதார புருஷர். விடியுமுன் விசும்பில் விளங்கும் வெள்ளி போல் தமிழகத்தில் தளரும் சைவமும் தமிழும் தழைய அவ்விரண்டுக்கும் புத்துயிர் வழங்கப் பிறந்த வள்ளலாவர். முன்னே பல காலங்களிலும் தமிழகத்திலிருந்து தாம் பெற்ற சில சிறு நன்மைகளை வட்டியுடன் பெருக்கி, ஒரு காலத்து ஒருமுகமாகப் பழங் கடனைத் தீர்த்து. என்றுந் தீர்க்கொணுவாறு தமிழகத்தை ஈழநாட்டுக்குக் கடமைப்படுத்திய பேருபகாரி நாவலரென்றால் அது மிகையாகா" என்று நாவலரை உளம் நிறைந்து உச்சி மீது வைத்து வாழ்த்துபவர் வேறு யாருமல்ல, இன்னுமொரு தமிழக நாவலர்தான். ஆம், நாவலர் சோமசுந்தர பாரதியார்தான்.




சென்னை நகரில் மொத்தம் 7 பஸ் டெப்போக்கள் உள்ளன. வடபழனி (வ.ப.), ஐயனாவரம் (ஐ), அம்பத்தூர் (அம்), அடையாறு (அ), மத்திய தெற்கு (ம.தெ.) மத்திய வடக்கு (ம. வ.), தண்டையார்ப்பேட்டை (த), உதாரணமாக "வ.ப." குறிப்பிட்டுள்ள பஸ்கள் அனைத்தும் இரவில் கடைசித் தடவையாக ஓடி முடிந்ததும், வடபழனியில் உள்ள டெப்போவுக்குப் போய்ச் சேர வேண்டும். ஒவ்வொரு டெப்போவிலும் சுமார் இருபது அல்லது இருபத்திரண்டு பஸ்களுக்கு ஒரு பிரிவு விதம் பல பிரிவுகள் உள்ளன. இந்தப் பிரிவுகளைக் குறிக்கின்றன I, II, III முதலிய ரோமன் எண்கள். ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு போர்மன் உண்டு. ரோமன் எழுத்துக்கு அருகில் உள்ள அராபிக் எண்கள் 1, 2, 3 முதலியன அந்த அந்தப் பிரிவில் உள்ள வரிசை எண்களைக் குறிப்பனவாகும். இரவில் அந்த வரிசைப்படி நிறுத்தப்பெறும் பஸ்களைப் பரிசோதித்துப் பழுது பார்ப்பது அந்த அந்தப் பிரிவின் போர்மனின் பணியாகும். முன்பு ஆங்கிலத்தில் "வி. பி." என்று எழுதப் பெற்று வந்ததை மாற்றி இப்போது தமிழ் எழுத்துக்களால் (வ. ப.) குறிப்பிடுகிறது தமிழக அரசு போக்குவரத்துத்துறை. - "பாணன்"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## நிலமிசை நீடு வாழ்வார்

"மும்மொழியில் வல்லுனராய் மூதறிவு மிக்கவராய்
நம்மொழியும் சிவநெறியும் நன்முறையில்
தழைத்திடவே
செம்மைநெறி தவறாது துறவுநெறி தாம்மேவி
அம்மம்மா! அவர்செய்த அருந்தொண்டுகள்
என்னென்பேன்!"

என்று புலவர் கீரனார் வியப்போடு விளம்பும் கருத்து வெறும் வெற்றுரை அல்ல; பொருள் பொதிந்த புகழுரையே.

நாவலர் நற்புகழ் நாற்றிசையும் பரவுக!

- ஈழவேந்தன்

# தீராத விளையாட்டு

கு. அழகிரிசாமி

மறு நாள் ரங்கராஜன் மதுரைக்குத் திரும்பவில்லை. மாலை நாலரை மணி வரையில் லாட்ஜை விட்டு வெளியே போகவும் இல்லை. முற்பகலில் தின சரிப் பத்திரிகையை அரை மணி நேரம் வாசித்துக் கொண் டிருந்தான்; பிற்பகலில் ஒரு மணி நேரம் தூங்கினன். இதைத் தவிர மீதி நேர மெல்லாம் தன்னையும் தன் எதிர்காலத்தையும் பற்றி எத்தனையோ விதமாகச் சிந்தித்துக் கொண்டிருந் தான். சில சமயங்களில் அவனுடைய சிந்தனைகள் எவ்வளவோ தூரம் சஞ்சரித்தும்கூடத் திரும்பத் திரும்பப் புறப்பட்ட இடத் துக்கே வந்து சேர்ந்து கொண்டிருந் தன. புறப்பட்ட இடமோ, காலம், திசை, மேடு, பள்ளம், பகைமை, வறட்சி போன்ற எதுவுமே அற்ற ஒரு சூனியமாக இருந்தது. இந்தச் சூனியத்தை விட்டு வேறு இடத்துக் குப் போக முடியவில்லை. வேறு எதை யும் கொண்டு வந்து இந்தச் சூனி யத்தை நிரப்பவும் முடியவில்லை.

அவனுடைய தந்தையின் ஆசை யும், சித்தப்பாவின் உபதேசமும் நினைவுக்கு வரும்போதெல்லாம் அவனை மூச்சுத் திணறும்படி செய்தன. இரு வரும் சேர்ந்து தனக்குப் [illegible]



விலங்கு மாட்டுவது போல் கருதினன். 'என் மேல் உயிருக்குயிராக அன்பு வைத்திருக்கும் இந்த இரு வரும் அந்த விலங்கைப் பொன்னாக மட் டும் பார்க்கிறார்கள். நானோ அந்தப் பொன்னை விலங்காக மட்டும் பார்க் கிறேன். பெரிய தர்ம சங்கடம்!' என்று தனக்குத் தானே உல்லாச மாகவும் வேதனையாகவும் சொல்லிக் கொண்டான்.

இவ்வளவு காலமும் விளையாட்டும் வேடிக்கையுமாக ஒரு விதக் கவலையு மின்றி இன்பகரமாக நாட்களைக் கழித் தது போல் இனியும் கழிக்க முடியாது

என்பதை எண்ணும் போது ஒரு சமயம் எதையோ இழந்து விட்டது போன்ற துயரமும், மறு சமயம் 'அப்படி வேடிக்கையாக வாழ்நாட்களைக் கழித்ததுதான் பெரிய தவறு' என்ற உணர்ச்சியும் ஏற்பட்டன.

'வீட்டை விட்டு வெளியே போகாமல் அம்மாவின் குணத்தைக் கண்டு வியப்பதிலும், சகோதரிகளுடன் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருப்பதிலும் காலத்தைப் போக்கி விட்டேன். இப்பொழுது வீட்டை விட்டு வெளியே வந்தால் கண் கூசுகிறது; திக்குத் திசை தெரியவில்லை. இப்படி என்னை வளர்த்தவர்கள் அன்பின் மிகுதியால் வளர்த்தார்கள் என்றாலும், அதுவும் எனக்கு விலங்கு போட்ட மாதிரி ஆகிவிட்டது. எனக்கென்று ஒரு வாழ்க்கை இலட்சியமில்லாமல் வளர்ந்ததன் பலன், மனசு அறவே விரும்பாத ஒரு தொழிலைச் செய்வதற்காக என்னைப் பலியிட வேண்டியிருக்கிறது......'

இந்தக் குழப்பத்துடன் மதுரைக்குப் போனால் அங்கே உள்ள சூழ்நிலை தன்னை மேலும் அதிகமான குழப்பத்துக் குள்ளாக்கும் என்று தோன்றியதால் அன்று சென்னையிலேயே தங்கிவிட முடிவு செய்தான். தனியே இருந்து யோசிப்பதற்கும் ஒரு தெளிவைக் காண்பதற்கும் லாட்ஜ்தான் சௌகரியமான இடம் என்பதால், பிரயாணத்தை ஒத்திவைத்துவிட்டு, நாலரை



மணிக்கு வெளியே கிளம்பினன். கடைத் தெரு வழியாக ஒரு மைல் தூரம் நடந்தான். ஏதேனும் படம் பார்க்க லாமா, திரும்பவும் ராஜகோபாலன் வீட்டுக்குப் போகலாமா என்றெல்லாம் யோசித்தான். கடைசியில் திருவல்லிக் கேணிக் கடற் கரைக்கே போக முடிவு செய்து அங்கு சென்ருன். முந்தினநாள் ராஜகோபாலனும் தானும் போய் உட் கார்ந்த இடத்திலேயே உட்கார்ந்தான். அங்கே அமர்ந்திருக்கும்போது, 'போதிய சொத்து சுகங்களை வைத்திருக்கும் நீ ஒரு பெரிய காரியத்தைச் சாதிக்க நினைத்தால் முடியும்' என்னும் பொருள் பட ராஜகோபாலன் கூறியது ஞாப கத்துக்கு வந்தது.

'வக்கீல் தொழில் செய்தும் உலக அனுபவமில்லாததால் ராஜகோபாலன் இப்படிச் சொல்கிருன். அவன் சொல் வது என்னவோ உண்மைதான்; ஆனல் நடைமுறை அப்படியில்லையே ! பெரிய இலட்சியங்களுக்காகத் தியாகம் செய் கிறவர்கள் பெரும்பாலும் ஏழை களாகத்தான் இருக்கிருர்களே ஒழிய, வசதி படைத்தவர்கள் எங்கே தியாகம் செய்கிருர்கள்? பணக்காரார்கள் தங்கள் சம்பாத்தியத்தில் ஒரு ரூபாய் குறைந் தாலும் சித்தப்பாவைப் போல் சாப் பாட்டுக்குக் கஷ்டம் வந்து விடுமோ என்று அல்லவா நடுங்கிச் சாகி ருர்கள் ?.....'

அப்போது கீழ் வானில் நிலாவை மூடியிருந்த வெள்ளை மேகங்கள் விலகி, சந்திரன் சோபையோடு பிரகாசித் தது. அந்தக் காட்சியில் தன் சிந்தனை களை மறந்து லயித்தான் ரங்கராஜன். பௌர்ணமிக்கு இன்னும் இரண்டு அல்லது மூன்று நாட்கள்தான் இருக் கும் போல் நிலவின் உருவத் தோற் றம் காணப்பட்டது. நீலக் கரு நிறத் தில் பால் நுரைகளோடு அலையெறி யும் கடல், நிலவொளியில் பளபளத் தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரையி லும் அந்தப் பெரிய காட்சியைப் பார்த்து அவனும் ஒரு பெருமிதம் கொண்டான். உலகத்துச் சிறுமைக ளெல்லாம் மறந்து விட்டன. சுகமான காற்று உள்ளத்தைக் கிளுகிளுக்கவும் செய்தது. அப்போது அவனுக்குத் தாயாரின் ஞாபகம் வந்தது; விஜயா வின் ஞாபகமும் வந்தது. அந்த நேரத் தில் அவ்விருவரும் அங்கே இருந்தால், அந்த இடம் சொர்க்கமாக மாறி யிருக்கும் என்றும் சொல்லிக் கொண் டான் அவன்.

எட்டு மணி வரையில் கடற்கரை மணலில் உட்கார்ந்திருந்து விட்டு வாட்ஜுக்குத் திரும்பி வந்தான் ரங்க ராஜன். சாப்பிட்டு விட்டு முதற் காரியமாகத் தன் டயரியை எடுத்து, அன்றையத் தேதிக்குரிய பக்கத்தைத் திறந்து, ''நேற்றும் இன்றும் இருந்த மனக் குழப்பம் கடற்கரைக்குப் போய் வந்த பிறகு தீர்ந்து விட்டது. அம்மாவையும் விஜயாவையும் நினைத்த மாத்திரத்தில் இன்னதென்று தெரி யாத ஒரு தெளிவும் சந்தோஷமும் பிறந்தன... இன்று அம்மாவும் அப்பா வும், விஜயாவும்கூட நான் மதுரைக் குத் திரும்பாததற்காக மிகவும் கஷ்டப் பட்டுக் கொண்டிருப்பார்கள். அப்பா இன்றிரவு தூங்கவே மாட்டார். எதற்காக என்னை இப்படிக் கண் இமைகளுக்குள் வைத்துக் காப்பாற்ற நினைக்கிருர் ? ராஜகோபாலன் கேட் டது போல, நான் என்ன கைக் குழந்தையா? பரிதாபம்....!'' என்று எழுதினன். மேற்கொண்டு எழுத இடம் இருந்தது. ஆனல் விஷயம்தான் இல்லை. அப்படியே டைரியின் முன் பக்கங்களைப் புரட்டினன். விஜயாவைப் பற்றி எழுதி யுள்ள ஒவ்வொரு வரியையும் படித்துப் பார்த்தான்:

''விஜயா சொன்னள்: நிறையச் சம்பாதிக்கத் தொடங்கி விட்டால் வக்கீல் வேலை பழகிப் போகுமாம் ! மனசும் தொழிலில் லயித்து விடு மாம் !''

இந்த வரிகளைப் படித்ததும், 'நான் நிறையச் சம்பாதிக்க வேண்டும் என்று விஜயாவும் ஆசைப்படுகிருள்' என்று ரங்கராஜன் சொல்லிக் கொண்டான்.

''விஜயா வீட்டுக்குப் போனேன். ராஜோபசாரம் செய்தார்கள். அவ ளுடைய தாயார், அவளையும்விட அழகாக, நிறமாக இருந்தாள். அன் பாகப் பேசினள். ஆனல் முகத்தில் ஏதோ ஒரு வேதனை காணப்பட்டது. அதற்கு ஏற்ருற்போல் அவர்கள் வீடு மாற்றி வந்ததிலும் ஒரு மர்மம் இருப் பது போல் தோன்றியது....

''விஜயாவின் அப்பாவைப் பார்க்க வேண்டும். அவரைப் பற்றி அவள் சொல்வதைக் கேட்கும்போதெல்லாம் அவரைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் அதிகமாகிறது. நினைத்தால் நாளையே பார்க்கலாம். ஆனல் அவரை நினைக்கும் போது ஒரு பயம் உண்டா கிறது. எவ்வளவு பெரியவரோ ? அவர் முன்னிலையில் என்னல் என்ன பேச முடியுமோ?

''விஜயாவின் தங்கை கலா மிகவும் சங்கோசியாகவும் பேசா மடந்தை யாகவும் இருக்கிருள். அதே சமயத் தில் என் முன்பாக மானைப் போல் துள்ளி ஓடுகிருள். சங்கோசந்தான்

அதற்கும் காரணமோ? அவனுக்கும் என் மேல் அபாரமான பிரியமும், மதிப்பும் இருப்பதைத்தான் அந்தச் சங்கோசம் எடுத்துக் காட்டுகிறது....''

''கடைசி வெள்ளிக்கிழமையன்று திருப்பரங்குன்றத்துக்கு என்னையும் அம்மாவையும் விஜயா அழைக்கிறாள்.''

இந்த வாக்கியத்தை வாசித்ததும், டைரியை மூடிவிட்டு விஜயாவுடன் திருப்பரங்குன்றத்துக்குச் செல்வதையே மனதில் கற்பனை செய்து பார்த்துக் கொண்டிருந்தான். ''விஜயாவுக்கு என் மேல் எதற்காக இவ்வளவு அன்பு என்பதுதான் தெரியவில்லை. பார்க்கப் போனால் இதுவுமேகூட ஏதோ ஒரு மர்மமாக இருக்கிறது' என்று தனக்குள்ளாகவே சொல்லிக் கொண்டான் ரங்கராஜன்.

## அத்தியாயம் 21

ரங்கராஜன் நினைத்தபடியே அவனுடைய தந்தை ஊணுறக்கமின்றித் தத்தளித்துக் கொண்டிருந்தார். அவன் குறித்த தேதியில் வரவில்லை என்பதோடு மறு நாள் காலையிலும் வரவில்லை. வண்டிகள் தாமதமாக வரக் கூடுமோ என்று அவர் ஸ்டேஷனுக்கே போனார். அங்கே விசாரித்த போது எல்லா வண்டிகளும் குறித்த காலத்தில் வந்து போய் விட்டதாகச் சொன்னார்கள். அவருக்கு ஒன்றுமே ஓடவில்லை. நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. சென்னையில் அவன் ஒரு நாள் அதிகமாகத் தங்குவதற்கு ஒரு வேலையும் இல்லை. அப்படியே தங்கினாலும் மறு நாள் காலையில் வர வேண்டியதுதானே? போன இடத்தில் உடம்புக்கு ஏதாவது வந்து விட்டதோ?... தன்னந் தனியாக நோயோடு போராடிக் கொண்டிருக்கிறானோ? இதையும்விட மோசமாக ஏதாவது அசந்தர்ப்பம் நேர்ந்து விட்டதோ?

நடராஜ முதலியார் மனம் பேதலித்துப் போய் வீடு திரும்பினார். சென்னையில் அவன் எங்கே தங்குவான் என்று தெரிந்திருந்தாலும் தந்தியடித்திருக்கலாம். அதற்கும் வழியில்லாமல் போய் விட்டது. மூளையைப் போட்டுக் குடைந்து கொண்டு ஓரிடத்திலும் நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருக்கும் போது அவருக்கு ஒரு சந்தேகம் உதித்தது. தம்பி அருணாசல முதலியார் தம்மிடம் சொன்ன விஷயத்தை ஏற்கனவே ரங்கராஜனுக்குக் கடிதத்தில் எழுதித் தெரிவித்து அவனைக் கண்டித்திருப்பாரோ, அதனால்தான் கோபித்துக் கொண்டு மதுரைக்குத் திரும்பாமல் இருக்கிறானோ என்று அவருக்குத் தோன்றியது. ஜானகியம்மாளிடம் போய், ''ராஜா உன்கிட்டே ஏதாவது சொன்னானா?'' என்று கேட்டார்.

''மெட்ராஸுக்குப் போய்ட்டு வர்றதாத்தான் சொன்னானே'' என்று சலனமில்லாமல் அமைதியான குரலில் சொன்னாள் மனைவி.

''எப்போ வர்றதாச் சொன்னான்?''

அந்த அம்மாள் இலேசாகச் சிரித்தாள்: ''இதைப் பத்துத் தடவை கேட்டுட்டீங்க....''

''அப்படின்னா நேத்தே வந்திருக்கணுமே! இன்னிக்கும் வரல்லியே?''

''யாருக்குத் தெரியும்? ரொம்ப நாள் கழிச்சு மெட்ராஸுக்குப் போயிருக்கிறான். சிநேகிதாள் இருக்கச் சொல்லிக் கட்டாயப் படுத்தியிருப்பாங்க. நாலு நாள் கழிச்சு வரலாம்னு அங்கேயே தங்கியிருப்பான்.''

''ஒரு கடிதாசாவது போட வேண்டாமோ?''

''போட்டிருக்கலாம்.... என்னவோ போடாமல் இருக்கிறான்....!''

''அந்தப் பெண்ணைக் கேட்டால் தெரியுமோ?''

''எந்தப் பெண்ணை?''

''அந்தக் கோடி வீட்டுப் பெண்ணைத்தான்.''

''அவளுக்கு மட்டும் எப்படித் தெரியும்? அவளே என்னைப் பத்துத் தடவை வந்து கேட்டுட்டா....!''

''அவள் வந்து கேட்டாளா? ஏன்?... சரி சரி'' என்று சொல்லி விட்டு நடராஜ முதலியார் இன்னும் கொஞ்சம் மன வியாகுலத்துடன் வெளியே போய் விட்டார். ஸ்டேஷனிலிருந்து திரும்பியவர் உட்காரவே இல்லை. முத்துக் குமாரைத் தேடிப் போனார். அவன் வீட்டில் இல்லை. இவரும் கோர்ட்டுக்கு ஓடினார். வெகு நேரம் காத்திருந்து அவனைக் கண்டுபிடித்துக் கேட்டார். அவனும், ''நேத்தே வந்திருக்கணும்... அப்படித்தான் என் கிட்டேயும் சொன்னார்.... போன காரியம் முடியல்லியோ என்னவோ?'' என்று சொன்னானே ஒழிய அவர்




பச்சைக் குதிரை விளையாட்டு நமக்குத் தெரியும். "கங்காருத் தாவல்" என்று ஒரு புதுரக விளையாட்டு உண்டு. ஆர்வ முள்ளோர் 55ம் பக்கம் பார்க்கவும்.

எதிர்பாராத ஒரு தகவலை, ஓர் அந்தரங்கத்தைச் சொல்லக் காணோம்.

அன்று மாலையில் நடராஜ முதலியார் மீனாட்சியம்மன் கோயிலுக்குப் போய் ரங்கராஜன் பெயருக்கு அர்ச்சனை செய்து, அவன் சௌக்கியமாகத் திரும்பி வர வேண்டும் என்ற ஒரே பிரார்த்தனையை மணிக் க ண க் கி ல் மீனாட்சியம்மனின் சந்நிதானத்தில் மந்திரம் போல் உச்சாடனம் செய்து விட்டு விடு திரும்பினார். அன்றுதான் முதல் தடவையாக அவர் மனைவிக்குப் பூ வாங்கிக் கொள்ளாமல் கோவில் பிரசாதங்களை மட்டும் கையில் எடுத்துக் கொண்டு வந்தார். ஜானகியம்மாள் இதைக் கவனித்துக் கொண்டாள். அவருக்காக அநுதாபம் தெரிவிக்கத் தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள். பசியில்லை என்று சொல்லி விட்டுப் படுத்துக் கொள்ளப் போன அவரைக் கட்டாயப்படுத்தி அவள் சாப்பிடச் செய்தாள்.

நடராஜ முதலியார் அரைகுறையாகச் சாப்பிட்டு விட்டு வெளியே வரும் போது, விஜயா திடீரென்று உள்ளே வந்தாள். அவரைக் கண்டதும் விலகி நின்று, அவர் கடந்து சென்றபின் ஜானகியம்மாளைத் தேடிக் கொண்டு உள்ளே போனாள். நடராஜ முதலியார் அப்படியே நின்று திரும்பிப் பார்த்தார்.

விஜயாவின் கையிலும் கோயில் பிரசாதம் இருந்தது. "அம்மா! கோயிலுக்குப் போயிருந்தோம். இந்தாருங்க, பிரசாதம்" என்று சொல்லி ஜானகியம்மாளிடம் விபூதி, குங்குமம், பூச்சரம் முதலியவற்றைக் கொடுத்தாள்.

அவள் எதற்காகக் கோயிலுக்குப் போனாள், அங்கே என்ன பிரார்த்தனை செய்தாள் என்பவற்றையெல்லாம் அவள் சொல்லாமலே நடராஜ முதலியார் ஊகித்துக் கொண்டு விட்டார். வெந்த புண்ணில் வேல் குத்திய மாதிரி இருந்தது அவருக்கு. தலையில் அடித்துக் கொள்ளாத குறையாக மாடிக்குப் போய்ப் படுத்தார்.

"அவர்கிட்டே யிருந்து தந்தி வந்ததா?" என்று விஜயா ஆவலோடு கேட்டாள்.

"தந்தி எதுக்கம்மா ? தானே வந்துடுவான்" என்றாள் ஜானகியம்மாள்.

"அப்படித்தான் நானும் நினைக்கிறேன்.... கவலைப்படாதீங்கம்மா !" என்று அநாவசியமாக அந்த அம்மாளுக்கு ஆறுதல் சொல்லி விட்டு விஜயா தன் வீட்டுக்குத் திரும்பினாள்.

இரவு ஒன்பது மணி அடித்துச் சில நிமிஷங்கள் கழிந்திருக்கும். வேலையெல்லாம் முடிந்து அப்பொழுதுதான் ஜானகியம்மாளும் கட்டிலில் போய்ப் படுத்தாள். சமையற்காரக் கிழவி உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். அப்போது வாசற் கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது.

"அம்மா !"

குரல் கேட்டதும் நடராஜ முதலியார் படுக்கையை விட்டு எழுந்து கீழே ஓடி வந்தார்.

மறு குரல் கேட்பதற்குள் கதவைத் திறந்து விட்டார்.

ரங்கராஜன் பெட்டியோடு உள்ளே நுழைந்தான். "பஸ் இப்பத்தான் வந்தது" என்று தனக்குத் தானே பேசிக் கொள்பவனைப் போல் சொல்லிக் கொண்டு நேரே உள்ளே சென்றான். சாப்பிட்டுக் கொண்டிருந்த கிழவி எழுந்து நின்று, "ஐயா !" என்றாள்.

"அம்மா எங்கே பாட்டி ?"

சென்னை
கெயிட்டி
ஸ்ரீ முருகன்
சயானி
ஸ்ரீநிவாசா மற்றும்
தென்னாடெங்கும்

வித்யா மூவிஸ்

# ஆயிரம் பொய்

(சிரிப்புக்கு மட்டும்)

டைரக்ஷன் V. சீனிவாசன்
தயாரிப்பு M. வேணுகோபால்
தயாரிப்பு மேற்பார்வை V. ராமசாமி

கதை, வசனம் ▶



"படுத்திருக்காங்க ஐயா. இப்பத் தான் வரீங்களா?"

"ஆமாம்" என்று சொல்லிவிட்டு ரங்கராஜன் மாடிக்குப் போனான். அவனைப் பின்தொடர்ந்து சென்ற முதலியார், 'மீனாட்சியம்மனுக்குச் செய்த பிரார்த்தனை வீண் போகவில்லை' என்று கண்கள் பனிக்க அம்பிகையை உள்ளுக்குள் நினைந்து வணங்கினார்.

ஜானகியம்மாள் எழுந்து உட்கார்ந்து, மகனை வரவேற்று, "ராஜா நேத்தே ஏன் வரல்லே? உங்க அப்பா துடிச்சுப் போயிட்டார்" என்றாள் சற்றுப் பரிகாசக் குரலில்.

ரங்கராஜனுக்கு அந்த வார்த்தைகளைக் கேட்கவே கஷ்டமாக இருந்தது. "போனவன் வராமல் இருந்துடுவேனா? ஒரு நாள் தாமசமாயிட்டதுக்காகத் துடிச்சுப் போவானேன்?" என்று கொஞ்சம் சங்கடப்பட்டுக் கொண்டே சொன்னான்.

"நீ அப்படி நினைக்கிறே! இங்கே உள்ளவங்க மனசு அப்படியில்லையே! அந்தப் பொண்ணுங்கூட நேத்திக்குப் பத்து தடவை, இன்னிக்குப் பத்து தடவை வந்து கேட்டுட்டா, நீ ஏன் வரல்லேன்னு!"

"எந்தப் பொண்ணு?"

"விஜயா தான்! கொஞ்ச நேரத்துக்கு முன்னாலேகூட வந்து போனாள்."

இந்தப் பேச்சு காதில் விழுந்ததும் நடராஜ முதலியாருக்கு, வாழ்க்கையிலே முதல் தடவையாக மனைவியின் வார்த்தைகள் பிடிக்காமல் போய்ச் சிறிது எரிச்சலும் உண்டாயிற்று.

'இதைப் போய் ஏன் இவன்கிட்டே சொல்கிறாள்?' என்று அவர் முனகிக் கொண்டார்.

"அவளுக்கு ரொம்ப நல்ல மனசு. இல்லையா?" என்று ரங்கராஜன் அப்பாவி மாதிரி நடித்துக் கொண்டு அம்மாவிடம் கேட்டான்.

"ராஜா! உங்க அப்பா துடிச்சுப் போயிட்டால், அது தப்பு! விஜயா துடிச்சுப் போயிட்டால், அது நல்ல மனசு!"

ரங்கராஜனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அம்மா எவ்வளவு சுலபமாகத் தன் வாயை அடைத்துவிட்டாள் என்று வியப்போடு அவள் முகத்தைப் பார்த்தான்.

"ராஜா! சாப்பிட வேண்டாமா? வா" என்று சொல்லி விட்டு அவள் எழுந்து அவனைக் கீழே அழைத்துக் கொண்டு சென்றாள்.

மனைவி மகனுக்குச் சரியாகச் சூடு கொடுத்து விட்டாள் என்று முதலியார் சந்தோஷப்பட்டார். ஒரு நிமிஷத்துக்கு முன் மனைவி மீது ஏற்பட்ட அற்பக் கோபம் மறைந்து, 'ஜானகிக்குத் தெரியாததா? அவளைப் பைத்தியக்காரி என்று நினைத்து ஒரு கணம் கோபப்பட்டேனே! நான்தான் பைத்தியக்காரன்! மூடன்!' என்று தம்மையே கடிந்து கொண்டு பிராயச்சித்தம் செய்தார்.

(தொடரும்)

சிறுவர்களுக்கான "கங்காருத் தாவல்" ஓட்டம் ஒன்று இப்போது பிரிட்டனில் அறிமுகமாகியுள்ளது. பெரிய அளவிலான காற்றடைத்தும் பெரிதாக்கிக் கொள்ளக்கூடிய பிளாஸ்டிக் பந்துகள் இவை. இவற்றில் கைப்பிடியும் பொருத்தப்பட்டுள்ளன. இவற்றைப் பிடித்துக் கொண்டு இந்தப் பந்தில் (அல்லது பலூனில்) உட்கார்ந்து கொண்டு காலால் தரையை உந்தி உந்தி முன்னேறிச் செல்ல வேண்டும். இந்தப் பந்து எம்பி எம்பிக் குதிக்கும். உந்தும் வேகத்தைப் பொறுத்துப் பந்து முன்னேறிச் செல்லும். சிறுவர்களுக்கான விளையாட்டு இது. -பி.ஐ.எஸ்.



# சோர்வா? சோம்பலா?
# அஜீர்ணமாக இருக்கலாம்

ஜீரணம் பாதிக்கப்பட்டால், வேலையில் ஈடுபாடு குறைகிறது. எரிச்சல் ஏற்படுகிறது. தலைக்குமேல் வேலை காத்திருக்கும்போது உங்களை அஜீர்ணம் பாதிக்க விடலாமா? ஹ்யூலெட்ஸ் மிக்சர் அருந்துங்கள். அது விரைவில் நிவாரணம் அளிக்கிறது. வலியுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பு அளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்று உபாதைகளுக்கும் நல்லது. வயிற்றுப் போக்கு இருந்தால் அபினி சேர்ந்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.

C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட், 56A நைனியப்ப
நாயக்கன் தெரு, மதராஸ் 3






**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்குச் சிறந்தது**

# படித்துப் பாருங்கள்

**சென்னை அசோக் நகரைச் சேர்ந்த இல்லத்தரசி ஸ்ரீமதி சாந்தா கிருஷ்ண மூர்த்தி சொல்கிறார்:**

"இது ஒரு பொன்னான புத்தகம். என் குழந்தைகள் 'நர்ஸரி' வகுப்பில் படிக்கின்றன. அவர்களுக்கு ஆங்கிலப் பாடங்கள் உண்டு. இந்தப் புத்தகத்தைக் கண்டதும் என் குழந்தைகள் குதூகலத்தால் குதித்தன. புதிய புத்தகத்தைக் கண்டால் சாதாரணமாக எல்லாக் குழந்தைகளுக்கும் எழும் உவகை அல்ல அது. நம் தெய்வ உருவங்களை, பெயர்களைப் பயன்படுத்தித் தயாரித்த புத்தகம் இது. இந்தப் புதுமை அவர்களை அந்த அந்நிய மொழிக்கு வெகு நெருக்கத்தில் கொண்டு போய்விட்டது. அர்ஜுனன், பிரும்மா, துர்க்கை, ஏகலைவன், ஜனகர், கௌசல்யை, பரசுராமர், நாரதர், தியாகராஜர் இவர்களைப் பற்றியெல்லாம் நம் இந்தியக் குழந்தைகளுக்கு ஆரம்பப் புத்தகங்களில் ஏது படமும் பாடமும்?

குழந்தைகள் மட்டுமல்ல, அவர்களுக்கு வீட்டில் பாடம் சொல்லித் தரும் தாயாராகிய எனக்குமே இந்தப் புத்தகம் புதிய நம்பிக்கையைக் கொடுத்திருக்கிறது. ஒவ்வொரு எழுத்துக்கும் அதை முதலாகக் கொண்ட சொல்லை நம் இந்தியப் பண்பாட்டுக்கு ஏற்ப அமைத்திருப்பதால் ஒவ்வொரு சொல்லுக்குமே ஒவ்வொரு கதை சொல்லலாமே. உமையும், சரஸ்வதியும், ஹரனும், கணேசனும் அல்லவா இந்த ஆங்கில அரிச்சுவடிப் புத்தகத்தின் கதாநாயகர்களாக விளங்குகிறார்கள். இம்மாதிரிப் புத்தகங்கள் தான் அந்நிய மொழியானாலும் நம் பண்பாடு கலாசாரம், நாகரிகம் இவைகளைப் பிஞ்சு உள்ளங்களில் பசுமரத்தாணி போல் பதிவதற்கு ஏற்ற பண்புள்ள கதைகள் சொல்வதற்குத் தூண்டுகோலாக இருக்கும்."

**திருச்சியை சேர்ந்த ஈ. ஆர். எலிமெண்டரி பாடசாலை ஆசிரியர் திரு டி. எஸ். வேங்கடராம அய்யர் கூறுவதைக் கேட்போம்:**

"ஆங்கிலம் அந்நிய மொழியானாலும் நமக்கு வாழ்வளிக்கும் மொழி அது. விஞ்ஞானத்தையும் நல்ல பல கலைகளையும் நமக்கு வழங்கியுள்ள மொழி அது. உலக நாடுகளுடன் நாம் உறவாடுவதற்கு உதவும் மொழியாகிய ஆங்கிலத்தை நாம் புறக்கணிக்க முடியாது, புறக்கணிக்கவும் கூடாது.

அந்நிய மொழியானாலும் அதை நம் குழந்தைகளுக்குக் கற்பிக்கும்போது நம் கலாசாரத்தின், பண்பாட்டின் மூலமாகக் கற்பிக்க வேண்டும். ஆனால் இதுநாள்வரை ஆங்கிலேயர் வகுத்துக் கொடுத்த கல்வி முறையையே பின்பற்றி வரும் நாம், சுதந்திரமடைந்த பிறகும் அதில் மாற்றம் ஏதும் காணவில்லை. செய்த ஒருசில மாற்றங்களும் கல்வியின் தரத்தை உயர்த்தியதாக இல்லை. இந்த ஆங்கில அரிச்சுவடி, அமைப்பில் அந்நிய பாணியில் இல்லாமல் இந்திய பாணியில் உள்ளது. இந்த எண்ணம் இத்தனை காலத்துக்குப் பிறகாவது தோன்றியதே என்று மகிழ்கிறேன். அதுவும் காஞ்சி காமகோடிப் பெரியவாளின் யோசனையும் ஆசியும் அன்பும் அருளும் பெற்றுத் தயாராகி இருக்கிறது இப் புத்தகம் என்பது ஒரு விசேஷம். கல்வித் தொழிலில் இருக்கும் எங்களுக்கெல்லாம் மனமகிழ்ச்சியைத் தரும் விஷயம், இதில் நம் குழந்தைகளுக்கு நம் கலாசாரத்தைப் பற்றி நல்ல பல கதைகள் சொல்ல வாய்ப்பிருக்கிறது என்பதுதான். கற்பனை செய்யக்கூட முடியாத பெயர்களையும் சம்பவங்களையும் கொண்ட பாடங்களையும் பாடல்களையும் சொல்லித் தருவதைவிட நம் பாரத சரித்திர, இதிகாச புராணங்களில் வரும் கதாபாத்திரங்களின் கதைகளைச் சொல்லித் தர இதில் வாய்ப்பிருப்பதால் நம் வருங்காலச் சந்ததிகளுக்குப் பயன் உண்டு. முதல் புத்தகத்தின் அடிப்படையிலேயே அடுத்த புத்தகங்களும் தயாராகுமானால் ஆரம்பக் கல்வியில் இது ஒரு மகத்தான பயனுள்ள மாற்றம்தான்."

ஒரு தாய், ஓர் ஆசான் இவர்களின் கருத்துக்களை இப்படிச் சொல்ல வைத்த புத்தகம் செகந்திராபாத் வித்யா மந்திர் தயாரித்துள்ள 'கோல்டன் ரீடர்ஸ்' என்ற ஆங்கில அரிச்சுவடி. காஞ்சி ஆசாரியாளின் யோசனைப்படி திரு பி. ஆர். சுப்பிரமணியம் அவர்கள் தயாரித்திருக்கிறார்.

'ஏ'—ஆப்பிள், 'பி' — பெட், 'ஸி' — கேட் என்றில்லாமல் 'ஏ' — அர்ஜுனன், 'பி' — பிர்மா, 'ஸி' — காவிரி என்று இப்படியே நம் இந்திய புராண இதிகாச சரித்திரநாயகர்களைக் கண்கவர் வண்ணங்களில், கருத்துமிக்க படங்களில் சித்திரித்துப் புத்தகம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இந்தியக் குழந்தைகளை மனத்தில் கொண்டு தயாரிக்கப்பட்ட ஆங்கில அரிச்சுவடி இது. நம் காஞ்சிப் பெரியவாளுக்கு நம் வருங்காலச் சந்ததிகளின் நலனில், வளர்ச்சியில் எத்தனை அக்கறை இருக்கிறது என்பதையே இப்புத்தகத் தயாரிப்பு சொல்லுகிறது. அச்சு, அமைப்பு எல்லாமே முதல் தரம். விலைமட்டும் ஏனோ குறிப்பிடப்படவில்லை.

பிரசுரம்: வித்யா மந்திர், செகந்திராபாத்.

## சிரிப்புப் படங்கள் வரைவது எப்படி?

பத்திரிகைகளில் வரும் கேலிச் சித்திரங்களையும், கார்ட்டூன்களையும் பார்க்கும் ஓவிய உள்ளம் படைத்த இளைஞர்களுக்கு அவைகளைப்போல் தாங்களும் வரைய வேண்டும் என்னும் ஆசை உண்டாவது இயல்பு. அப்படி ஆசைப்படுகிறவர்களுக்கு இச் சிறு நூல் நல்ல வழிகாட்டி. படங்கள் வரைந்து பாடம் சொல்லித் தருகிறார் 'சுதர்ஸன்.' ஆசை காட்டி மோசம் செய்யவில்லை இந்த நூல்! பாடத்தோடு பல சுவையான ஜோக்குத் துணுக்குகளையும் சேர்த்து அளிக்கிறார் 'சுதர்ஸன்.'

டி. சக்கரபாணி (''சுதர்ஸன்''), ஆஷா நிலையம், 231, லாயிட்ஸ் ரோடு, சென்னை-3; விலை: ரூ. 1-00,

# இலவசம்




ஒரு ஜோடி
பிக்னிக் டம்ளர்கள்
ஒவ்வொரு 450 கிராம் டின்
கோகோ மால்டீன்




ஒரு
**புதிய**
ருசியும் மணமும
கூடியது

**இப்பொழுது**
அதிக ஊட்ட
பொருள்களுடன்
கூடியது



இந்தியாவின் சொந்தம்
இந்தியாவின் பெருமை

# கோகோ மால்டீன்

பூரண சத்துணவு

## கோகோவும் தேனும் மிகுநதது

## நவீனவிஞ்ஞான ஆராய்ச்சியின்படைப்பு



கோகோ மால்டீன் லபாரேடரீஸ்

## மயிலே.... மயிலே...!

"மயிலே மயிலே இறகு போடு என்றால் போடாது" என்பது பழமொழி.

அதற்குரிய காலம் அறிந்து கேட்டால் மயில் இறகு போடும் என்பதில் சந்தேகமில்லை. ஒவ்வொரு ஆண்டும் தை, மாசி மாதங்களில் தன் தோகை முழுவதையும் அலகால் கோதி உதிர்த்து விடுகிறது மயில். அப்போது இரவில் மயில்கள் வந்து தங்கும் மரங்களின் கீழிருந்து காலை நேரங்களில் நிறைய மயில் இறகுகளைச் சேகரிக்கலாம். பின் நான்கு மாதங்களில் புதிய பளபளப்பான தோகை வளர்ந்து விடுகிறது.

தகவல், புகைப்படம்: ஆர். ராம்.





இந்தச் சூரியனுக்குத்தான் எத்தனை பொறுப்புக்கள், கவலைகள்? தன் மண்டலத்துக்குட்பட்ட எல்லாக் கிரகங்களையும் அதனதன் பாதையில் அணு பிசகாமல் சுற்றி வரச் செய்ய வேண்டும். வெளிச்சத்தையும் இருளையும் நியதி தவறாமல் அளித்து வரவேண்டும். இவ்வளவுக்குமிடையில் என் தோட்டத்தில் காய்த்துத் தொங்கும் ஒரே ஒரு திராட்சைக் கொத்தைத் தினசரி பக்குவமாக, கொஞ்சம் கொஞ்சமாகக் கனிய வைத்துக்கொண்டு வருவதைப் பார்க்கும் போது இந்தச் சூரியனுக்கு வேறு வேலையே இல்லையோ என்று எண்ணத் தோன்றுகிறது. - கலிலியோ

அனுப்பியவர்: ப. சண்முகசுந்தரம்



கயிற்றில் தொங்கும் குழந்தையின் வயது ஆறு நாள்! இப்படிக் கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துத் தொங்கும் சக்தி குழந்தைகளுக்கு உண்டு. அப்படித் தொங்காத குழந்தைக்குத் தசைகள் சரியாக இல்லை என்று பொருள். இதே போல் ஒரு புகைப் படத்தை எடுத்த போது குழந்தை விழுந்து விட்டால் பிடித்துக் கொள்ளக் கீழே டாக்டர்களும் நர்ஸ்களும் தயாராக இருந்தார்கள்.

"வெள்ளி" "டெய்லி மிர்ரர்"

இளம் காதலர்கள் நிறையவரும் பெல்ஜியம் ஹோட்டல் ஒன்றில் 'மெனு கார்டு'கள் இரண்டு விதமாகத் தயாரிக்கப்படுகின்றன. ஆண்கள் கையில் கொடுக்கப்படும் கார்டில் உண்மை விலைகள். பெண்கள் கையில் கொடுக்கும் கார்டில் இரட்டிப்பு விலையில் அச்சிடப்பட்டிருக்கும். அதைப் பார்க்கும்போது தனக்காக இவ்வளவு செலவு செய்கிறானே தன் காதலன் என்று அந்தப் பெண்கள் பூரித்துப் போகிறார்கள்.

ஆதாரம்: "விஷன்" தகவல்: "ரமணன்"



- ஆணுக்கு உலகமெல்லாம் வீடு. பெண்ணுக்கு வீடுதான் உலகம். கோயிலுக்கு வெளியே வந்து விழுந்துவிட்டால் தெய்வமும் கல்லாகி விடும். -- காண்டேகர்



- உண்மையான மனைவிக்குத் தன்னுடைய அழகைப் பார்க்கக்கூடிய கண்ணாடி, தன்னுடைய கணவனின் கண்களேயாகும். - ஜான் டோபின்
- பார்த்து ரசிப்பதற்கு அழகான பூவை ஒத்தவள் பெண். ஆனால் அப்பூவின் அடியிலே தங்கி இருக்கும் பாம்பைப் போன்றவளும் அவளே தான். -- ஷேக்ஸ்பியர்
- பெண் உனது நிழலைப் போன்றவள். அவள் பின் நீ சென்றால் அவள் பறந்து செல்வாள்; அவளிடமிருந்து நீ பறந்து சென்றால் அவள் உன்னைப் பின்தொடர்வாள். - ஓர் ஆங்கிலக் கவி

அனுப்பியவர்: ஸ்வாதி வேல்முருகன்

# பிராயச்சித்தம்

**ஹோ**ட்டல் அறையின் கட்டிலில் படுத்தவாறு அறையின் விட்டத்தையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான் பீட்டர். உயிரற்ற ஜடம்போல அசையாமல் கிடந்த அவனது முகத்தில் அச்சத்தின் அறிகுறியாக வியர்வைத் துளிகள் அம்மை வடுக்களாய் அரும்பியிருந்தன. கண்களின் நிலை குத்திப்போன பார்வையில் ஏதோ ஒளியில்லை. அடிக்கடி புரண்டு படுத்தான், அனலிற்பட்ட புழுப்போல்.

திடீரென்று ஏதோ எண்ணியவனாய் எழுந்து உட்கார்ந்தவன், கைகளிரண்டாலும் முகத்தை மூடிக் கொண்டான். உஷ்ணக் காற்று பெருமூச்சாய் வெளிவந்தது. ஊற்றெடுக்கும் பழைய நிகழ்ச்சிகளை மறக்க முயன்றான். ஊஹூம். இறந்த காலத்தை மறக்க முயன்ற ஒவ்வொரு விநாடியும் அவனுக்குத் தோல்விமேல் தோல்விதான். மறக்க முயல்வது தானே மீண்டும் மீண்டும் நாய் வாலைப்போல எழுந்து வருகிறது!

சற்று முன் அவனது நண்பன் சொல்லி விட்டுப்போன அந்தச் செய்தி....

''ரோஸி இறந்து விட்டாள்!''

இந்த வாக்கியத்தை அவன் கேட்டபோது –

ஆயிரம் சம்மட்டிகள் ஒரே சமயத்தில் பிடரியில் அடித்தாற்போல் உணர்ந்தான். என்ன பயங்கரம்! அவன் சற்றும் எதிர் பார்க்காததல்லவா இந்தச் செய்தி! உடலைச் சிலிர்த்துக் கொண்டான். ரோமங்கள் குத்திட்டு நின்றன. ரோஸியின் உருவம் அவன் மனக் கண் முன்னே வந்து பேய்போல் நர்த்தனமாடியது. நினைவலைகள் அவனை அமுக்கி அமுக்கி எடுத்தன. இனந் தெரியாததொரு பீதி அவனைச் சூழ்ந்து கொண்டது. இருதயம் வேகமாக அடித்துக்கொள்ள மீண்டும் படுக்கையில் சாய்ந்து கொண்டான் அவன்.

அவனுள்ளேயே ஊற்றுப் பொங்கிக் கொண்டிருந்த பழைய சம்பவங்கள் நிழற்படமாய் அவன் முன்னே ஓடுகிறது.

**ரோ**ஸி.

எத்தனையோ மலர்களுண்டு. ஆனால் அவைகளிலெல்லாம் ரோஜாவுக்குத்தானே அழகு, மணம், கவர்ச்சி எல்லாம். ஆம், கோவையிலிருந்த நிர்மலா கல்லூரி மாணவிகளிடையே ரோஸி ஒரு ரோஜாவாய்த் திகழ்ந்தாள். புதுமைப் பெண்ணாய்த் திகழும் அவளிடம் பேராசிரியைகளுக்கெல்லாம் தனி அன்புண்டு. தானுண்டு, தன் படிப்புண்டு எனத் தன் வழியே போய்விடும் ஒழுங்கு ரோஸியின் மென்மையில் ஊறிய பெண்மை. பெண்மைக்கழகு அடக்கம் என்றிருப்பார்களே, அது நிரந்தரமாகக் குடிகொண்டவள் அவள்.



ஆனால்?

அழகுள்ள இடத்தில் ஆபத்தும் உண்டென்கிறார்களே, அந்த வாக்கியம் அவள் வரையில் உண்மை.

அவனது இதயத்தில் இடம் பெறப் படாத பாடும், செய்யாத சேஷ்டைகளும், பீட்டரிடத்தில் இனிமேல் இல்லை என்றே சொல்லலாம். ஆனால் ரோஸிக்கு? கொஞ்சித்தேனும் பீட்டர் இடத்தில் விருப்பமில்லையே?

ரோஜாவிடமிருந்த வெறுப்பு என்ற முள்ளைப் பற்றி அவன் கவலைப்படவில்லை.. வெறுப்பு என்ற அந்த முள்ளை அவன் கவனிக்காததால்தானே, பாவம் என்ற காயம் அவனது இதயத்தில் ஏற்பட்டது.

காலைப் பறக்க வைத்து ருசி காண முயன்ற அவன் சில தடவை அவளிடம் வாங்கிக் கட்டிக் கொண்டதுமுண்டு.

அன்று—

ரோஸி வீடு திரும்ப உடப்பிள்ளிபாளையம் பஸ் நிலையத்தில் நின்றிருந்தாள். எதிரே காணப்பட்ட முருகன் தியேட்டரிலிருந்து திரைப்படப் பாடலைப் பார்த்துக் கொண்டிருந்தவள், தனது கையை யாரோ வருடுவதை உணர்ந்து திடுக்கிட்டுத் திரும்பினாள்.

எதிரே பல்லைக் காட்டியபடி "இது உங்க நோட்டுக்கிலிருந்து விழுந்தது!" என்று கூறிய




இம்ப்ரான்சிஸ்

வாறு நாலாக மடிக்கப்பட்டிருந்த காகிதம் ஒன்றை நீட்டி நின்றான் பீட்டர்.

அந்தக் காகிதம் என்ன வென்பதைப் புரிந்து கொள்ள அவளுக்கு அதிக நேரமாக வில்லை. அவளது கண்கள் சிவந்தன. எரிமலை யானாள். அடுத்த கணம், 'பளார்!'

பீட்டரின் கன்னம் வெந்து விட்டதா? என்று கேட்க வந்தவர்களைப் போல அங்கு நின்றிருந்த சிலர் அவனை நையப் புடைத்து விட்டனர். பெண்ணிடம் வாலாட்டினால் இப்பாத்தான் போலும்!

அவமானமும் ஆத்திரமும் போட்டி போட அங்கிருந்து அகன்றவன்தான் பீட்டர். அதன் பின் அவன் ரோஸி இருந்த பக்கமே தலை வைத்துப் படுக்கவில்லை.

ஒரு வாரம் ஓடிவிட்டது.

ரோஸியின் பின்னே ஒருவன் விஷமம் செய்வதை அறிந்தோ என்னவோ அவளது தந்தை தேவசகாயம் அவளுக்கு வரன் தேட ஆரம்பித்தார். இத்தனைக்கும் ரோஸி தந்தையிடம் பீட்டரின் செய்கையைப் பற்றி மூச்சுக்கூட விட்டவளில்லை.

தேவசகாயம் திடீரென்று தான்தோன்றித்தனமாக மகளுக்கு வரன் தேட ஆரம்பித்தாரில்லை. அவரது நண்பரொருவர் பீட்டரின் செய்கையைப் பற்றி அவரிடம் கூறி, 'காலம் கெட்டுக் கிடக்கிறது. ஒரு கல்யாணத்தைப் பண்ணி வையுங்கள்' என்று சொன்னதன் பேரில்தான் மகளின் கல்யாண விஷயத்தில் அத்தனை விரைவாக அக்கறை எடுத்துக் கொண்டார் அவர்.

தேவசகாயம் தாயில்லாப் பெண்ணான மகளுக்கு விரைவிலேயே நல்ல வரனைப் பார்த்து விட்டார். வசதியான குடும்பத்தில் வரன் கிடைத்தது கண்டு அவருக்குப் பெருமை பிடிபடவில்லை. மாப்பிள்ளை வீட்டாருக்குப் பெண்ணை மிகவும் பிடித்துப் போயிற்று என்று கூறியதைக் கேட்டதும் வாழ்க்கையிலேயே அன்றுதான் அவர் மகிழ்ச்சியின் எல்லைக் கோட்டைக் கண்டார்.

மகளை மணமேடையில் கண்டு புளகாங்கிதம் அடைந்து மகிழ எண்ணிய அவரது இதயத்தில் பேரிடி விழுமென்று அவர் அறிந்தாரா?

அன்று மாலை—

ரோஸியும் அவளுக்கு வாய்க்கப் போகும் வருங்காலக் கணவன் ஜோசப்பும் கிறிஸ்தவ மதச் சடங்கின்படி 'திருமணச் சம்மதம்' கேட்கத் தேவாலயத்துக்கு வந்திருந்தார்கள்.

தேவசகாயம் மகளின் ஒளி மயமான வாழ்வை எண்ணி மகிழ்ந்துகொண்டிருந்தார். மாப்பிள்ளை வீட்டார்களுக்கோ அடக்கமாக அழகான பெண் கிடைத்து விட்டதில் திருப்தி நிறைந்த பூரிப்பு. ஜோசப்—ரோஸியின் முகங்களிலோ வருங்கால வாழ்வை எண்ணிக் கற்பனைக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருந்ததன் இன்பச் சாயல்கள்.

சற்று நேரத்துக்கெல்லாம் ஞானப்பிரகாசம் பாதிரியார் வந்தார்.

'திருமணச் சம்மதம்' கேட்கும் சடங்கு முறைப்படி முடிந்தது. இருவரது பெற்றோர்களுக்கும் மனம் நிறைந்து மகிழ்ச்சி பொங்கிக் கொண்டிருந்தது.

தேவாலயத்தை விட்டு வெளியே வந்தவர்களில் ஜோசப் மட்டும் ஜெபமாலை செபித்து விட்டு வருவதாகக் கூறித் தன் பெற்றோர்களை அனுப்பி விட்டான்.

இரவு மணி ஏழாகி விட்டது.

தேவமாதாவின் பெயரில் அமைந்திருந்த தேவாலயமாதலால் தேவாலயத்தின் உச்சியிலிருந்த தேவ மாதாவின் சிலையின் மேல் ஒளிர்ந்து கொண்டிருந்த மெர்க்குரி விளக்கு மாதாவின் மேல் தனது ஒளி வெள்ளத்தை உமிழ்ந்து கொண்டிருந்தது. தேவாலயத்தின் முற்றத்தில் வளர்ந்திருந்த மரங்களின் இலைகளினூடே தண்மை நிறைந்த மாருதம் சிலுசிலுத்துக் குழைந்து கொண்டிருந்தது.

தேவாலயத்தின் இடப் பக்க வாயிலின் அருகே வளர்ந்து குடை பரப்பி நின்றிருந்தது ஓர் அசோக மரம். அதன் அடியில் ஓர் உருவம் யார் வரவையோ எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்ததைப் போலக் கைகளைப் பிசைந்தவாறு சுற்றுமுற்றும் பார்த்தவாறு நின்றிருந்தது. அந்த உருவத்தைச் சற்று அண்டிச் சென்று பார்த்தோமானால் அது பீட்டர் என்று தெரியவரும்.

அவன் எதற்காகத் தேவாலயத்தின் வெளியே நிற்க வேண்டும்? அதோ! செப மாலை செபித்து விட்டுக் கோயிலின் இடப் பக்க வாயிலின் வழியாக இறங்கி வந்து கொண்டிருக்கும் ஜோசப்பின் அருகே ஏன் அப்படி வேகமாகச் செல்லுகிறான் அவன்?

''சார்!''

''யார் நீங்கள்?'' ஜோசப் கேள்விக்குறியாய்ப் பீட்டரை நோக்கினான்.

''சார், நீங்கள்தானே ஜோசப் என்பது?''

''ஆமாம், ஏன்?'' ஜோசப் அவனை ஒரு மாதிரியாகப் பார்த்தான்.

''உங்களிட்டே ஒரு முக்கியமான விஷயம் பற்றிப் பேசணும். நாம் கொஞ்சம் அந்த அந்தோணியார் சிலையருகே போய்ப் பேசுவது நல்லது! வருகிறீர்களா?''

ஜோசப் ஒரு கணம் ஒன்றும் புரியாமல் நின்றான். மறு நிமிடம், இயக்கிவிட்ட பொம்மை போல அவனைப் பின்தொடர்ந்தான்.

இருவரும் அந்தோணியாரின் சிலையின் பக்கவாட்டில் வந்து நின்றனர்; முதலில் பீட்டர்தான் பேச்சை ஆரம்பித்தான்.

''சார்! நான் சொல்லப்போகும் இந்த விஷயம் ரொம்ப முக்கியமானது. இது உங்களுக்கு அதிர்ச்சியாக இருக்கலாம்! என்ன செய்வது? உங்கள் நலமும், என் நலமும் இதில் அடங்கியிருக்கிறது! உங்கள் முகவரி தெரிந்திருந்தால் கடிதத்திலேயே இதைப் பற்றி உங்களுக்கு எழுதியிருப்பேன்.''

''என்ன சொல்கிறீர்கள், நீங்கள்?'' ஜோசப்பிற்கு விஷயம் புரியவில்லை.

''நீங்கள் கோயிலில் 'மணச் சம்மதம்' கேட்டு விட்டீர்கள் என்று நினைக்கிறேன்.''

''ஆமாம்...''

''ரோஸியைத்தானே உங்களுக்குப் பெண் பார்த்திருக்கிறார்கள்?''

''ஆமாம்...! ஏன் இதையெல்லாம் கேட்கிறீர்கள்?''

''ரோஸியின் தந்தை, தேவசகாயம் உங்களைச் சரியானபடி ஏமாற்றி விட்டார்.

# ஐடெக்ஸ்

## அழகு சாதனங்கள்

வரிசையிலே ஒரு புதிய தயாரிப்பு

**ஐடெக்ஸ் பிந்தி சாந்து ஸ்பெஷல்**

EYETEX BINDI

ஐடெக்ஸ் பிந்தி சாந்து ஸ்பெஷல்
அழகிய பிளாஸ்டிக் புட்டிகளில்
கிடைக்கிறது.




**ARAVIND LABORATORIES**

P. B. 1415 MADRAS-17

---

## உங்கள் உழைப்பும் எங்கள் உதவியும் விவசாயத்தை பெருக்குகிறது!











உங்கள் நிலம்
வளம் கொழிக்கும்
நிலமாக மாற
நல்ல விதை, உரம்,
பூச்சி கொல்லி மருந்து,
பம்பு செட், டிராக்டர், மாடு
முதலியவை தேவை.

இவைகளை வாங்குவதற்கும்,
கிணறு தோண்டவும்,
ஆழப்படுத்தவும், நிலங்களை
சீர்திருத்தவும் குறைந்த வட்டியில்
விவசாயிகளுக்கு
கடன் வழங்குகின்றோம்.



**தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்க் லிமிடெட்**



லிம்கோ மீட்டர்ஸ் ஸ்தாபனத்தி லிருந்து ஓய்வுபெற்ற சீப் இஞ்ஜினியர் ஸ்ரீ K. R. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் குமாரர் சிரஞ்சீவி கேப்டன் ராமமூர்த்திக்கும், மெட்ரோ கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்டின் ஜெனரல் சூப்பரின்டென்ட் ஸ்ரீ L.R. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் குமாரி சௌ. ஸ்வர்ணலதாவுக்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.





ஈரோடு, கல்கி ஏஜண்டும் லேட் ஸ்ரீ டி.கே. ராஜகோபாலன் அவர்களின் குமாரருமாகிய சிரஞ்சீவி T. R. ரமணி B. Sc., B. E.க்கும் மதுரை டாக்டர் S. சுவாமிநாதன் அவர்களின் குமாரத்தி சௌ. சுமதி B. A.,க்கும் சமீபத்தில் மதுரையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

ஸ்ரீ L.R. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் குமாரர் சிரஞ்சீவி K. ஸ்ரீனிவாசன் அவர்களுக்கும் பம்பாய் V. கோபாலன் அவர்கள் குமாரி சௌ. லலிதாவுக்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



பாவி! எங்கள் நட்பைப் பிரித்து ...... அவருக்கென்ன, மகளின் விருப்பத்தைப் பற்றியா கேட்க நினைக்கிருர். பணம்! பணம்! இதுதானே அவர் கண்டதெல்லாம்? மனுஷன் இவ்வளவு வயசாயிற்றே. கொஞ்சம்கூட, மோட்சம் — நரகம் என்று ஒன்று இருப்பதைப் பற்றிக் கூட எண்ணிப் பார்ப்பதில்லை!''

'' சார்...நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''இன்னுமா சார், உங்களுக்குப் புரியவில்லை? உங்கள் செல்வாக்கு அறிந்து. ரோஸியை உங்களுக்கு வலியக் கட்டி வைக்க முயற்சி செய்கிறார் தேவசகாயம். விஷயம், 'மணச் சம்மதம்' கேட்குமளவுக்குப் போகுமென்று நான் நினைக்கவேயில்லை, சார்! என் ரோஸி மாற்றான் ஒருவனுக்கு மாலையிட எப்படித்தான் துணிந்தாளோ? இல்லே, துணிய வைக்கப்பட்டாளோ? தெரியவில்லை....''

பீட்டர், இடையில் பேச்சை நிறுத்திவிட்டு ஜோசப்பைப் பார்த்தான். ஜோசப் வான வெளியையே வெறிக்கப் பார்த்தபடி நின்றிருந்தான். மங்கலான விளக்கொளியில், அவனது முகம் இருண்டு போய், நெற்றி நரம்புகள் புடைத்து நிற்பது தெரிந்தது.

சில நிமிடங்கள் அங்கே மயான அமைதி—புயல் அடித்து ஓய்ந்தாற் போன்ற பயங்கர அமைதி குடிகொண்டது.

பீட்டரே அந்த அமைதியைக் கலைத்தான்.

''உங்களுக்கு ஏன் இந்த விஷயத்தைச் சொன்னேமென்றிருக்கிறது, சார்! அமைதியாக இருந்த உங்கள் உள்ளத்தில் சலனத்தை ஏற்படுத்திவிட்டேன். ஆனாலும் இதைச் சொல்லாவிட்டால், உங்கள் வாழ்வும் மன அமைதியும் பாழாகிவிடக் கூடுமே என்று நினைத்துத்தான் உங்களிடம் சொன்னேன்.''

குழந்தையைக் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டினான் பீட்டர்.

இன்னும் மௌனமாகவே நின்றிருந்த ஜோசப், பிறகு கிணற்றுக்குள்ளிருந்து பேசுபவனைப்போலப் பேசினான். '' அவள் — ரோஸி கோவிலில் 'சம்மதக் குரல்' கூடக் கூறினாளே?''

''பாவம், அவள் என்ன செய்வாள் சார்? தேவசகாயத்தின் கண்டிப்பு அவளை அப்படிப் பேச வைத்திருக்கிறது. நகமும் சதையும் போல இருந்த எங்கள் அன்பைத் தேவசகாயத்தின் விபரீதப் போக்கு இப்படிக் கொண்டு வந்து விடும் என்று கனவிலும் கருதவில்லை சார் நான். எனக்கு வாழ வழி விடுவீர்கள் என்று நினைக்கிறேன்....''

மீண்டும் சில விநாடிகள் அங்கே அமைதி நிலவியது.

''சரி, நான் வருகிறேன், சார்!''

திடீரென்று நடையைப் போட்ட ஜோசப்பைக் கண்டு மலைத்து விட்டான் பீட்டர்.



''ஸ்கேல், செட் ஸ்கொயர் எடுத்துக் கிட்டுப் போகிறீங்களே எங்கே?''

''கோதுமை அல்வாவைத் துண்டு போடச் சொன்னாள் என் அம்மா!''

அடுத்த விநாடி தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''என்னை வாழ வைத்த உங்களை மறக்கவே மாட்டேன், சார்!'' என்று கரம் குவித்தான் பீட்டர்.

ரோஸிக்குச் சரியான பாடம் புகட்டி விட்டோம் என்று எண்ணிக் குதூகலித்துக் கொண்டிருந்தான் பீட்டர்.

பீட்டரின் திட்டமிட்ட சதி நன்றாக வேலை செய்தது. ஜோசப்பின் வீட்டார்களுக்குத் தேவசகாயத்தின் மீது ஓரே ஆத்திரமாக இருந்தது. தேவசகாயம் மாப்பிள்ளை வீட்டாரின் ஆத்திரத்தை அறிந்து திகைத்தார். உடனே ஞானப்பிரகாசம் பாதிரியாரை அண்டினார். பாதிரியாரும் விஷயத்தைக் கேட்டுத் திடுக்கிட்டார். உடனே அவர் ஜோசப்பைத் தனியே அழைத்துக் கேட்டார். அவனிடம்தான் பீட்டரின் சொற்கள் நன்றாக வேரூன்றி விட்டனவே. எனவே, அவன், ரோஸிக்கும், இன்னொருவனுக்கும் அவள் கல்லூரியில் படிக்கும் போதே தொடர்புண்டு என்பதைக் கூறினான். அதெல்லாம் சுத்தக் கட்டுக் கதையாக இருக்கும், வீணாக ஓர் அபலையைச் சந்தேகிக்காதே என்று புத்திமதி கூறினார் பாதிரியார். ஆனால், பீட்டரின் சொற்கள் ஜோசப்பின் உள்ளத்தில் எழுந்தெழுந்து பாதிரியாரின் வார்த்தைகளை அமுக்கி விட்டன.

மகளை மணக் கோலத்தில் கண்டு மகிழ எண்ணியிருந்த தேவசகாயத்தின் கனவுகளெல்லாம் கலைந்து விட்டன. வாழ்க்கையே அவருக்குச் சூனியமாய்ப் போய் விட்டது. விரக்தியோடு வீடு திரும்பினார். அவருக்கே இப்படி யென்றால் ரோஸிக்குக் கேட்கவா வேண்டும்? அவளால் பேசக்கூட முடியவில்லை. தனது வாழ்க்கை இப்படிக் கானல் நீராகி விடும் என்று அவள் எண்ணவேயில்லை. மனத்துக்குள்ளேயே வைத்துக் கொண்டு பொருமினாள். பித்துப் பிடித்தவளானாள். இந்தத் துயரம் போதாதென்று தேவசகாயம் வேறு அவளைச் சந்தேகித்தது. அவளுக்குப் பேரிடி விழுந்தாற்போல் ஆயிற்று. மயங்கித் தரையில் சாய்ந்தாள். அவளது போதாத காலம். சுவரில் தலை பட்டு, தலையெல்லாம் இரத்தம். தேவசகாயம் பதறிப் போனார். தலையில் கட்டுப் போடப்பட்டு ஒரு நாள் முழுதும் படுக்கையில் நினைவின்றிக் கிடந்தாள் ரோஸி.

மறு நாள் அவளது நிலைமையைக் கண்ட தேவசகாயம் திகைத்துப் போனார். உடனே டாக்டரை வரவழைத்தார். டாக்டர் சொன்ன வார்த்தை அவரை மேலும் திடுக்கிட வைத்தது. ஆம், ரோஸி உள நோய்க்கு அடிமையாகி விட்டாள். அன்று மலர்ந்த மலரான அவள் அக்கினியில் வீழ்ந்த மலரானாள். சிரிப்பாள்; திடீரென்று

புலம்ப ஆரம்பிப்பாள். ஏதேதோ கூறிப் பிதற்றவும் தொடங்குவாள்.

தேவசகாயம் ஊண் உறக்கமின்றி, மகளருகே அமர்ந்திருந்தார். தாமே அவளைச் சாவின் கரங்களில் ஒப்படைத்து விட்டோமென்று அவரது உள்ளம் அலறிப் புலம்பிக் கொண்டிருந்தது.

நேற்று பின்னிரவு, மணி ஐந்திருக்கும். வேதனையாலும் உணவைச் சரியாக உண்ணாததாலும் களைத்துப் போயிருந்த தேவசகாயம் மகள் அருகே அமர்ந்திருந்தார். உடற் களைப்பு அவரை உறக்கமாய்ச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது. மெல்லக் கண்களை மூடப் போனார். திடீரென்று மயக்கமாய்க் கிடந்த ரோஸி புலம்ப ஆரம்பித்தாள்.

"அப்பா !"

தேவசகாயம் திடுக்கிட்டு உணர்வுபெற்றார்.

"என்னம்மா ?"

"அப்பா, மாப்பிள்ளை வீட்டார்கள் வருகிறார்களாப்பா ?"

அவரால் என்ன கூறுவதென்றே தெரியவில்லை. துண்டை வாயில் வைத்துக் கொண்டு குலுங்கினார்.

"அவர்கள் வரவில்லையானால் போகட்டும் அப்பா ! அதோ... அம்மா என்னை வா வான்னு கூப்பிடறாப் போலத் தோணுது..... நான் போகட்டுமா, அப்பா?"

மகளின் பேச்சை அவர் புரிந்து கொண்டார். துயரம் எல்லை கடந்தது. 'கோ' என்று கதறி விட்டார்.

"நீங்க அழாதீங்கப்பா ! நான் போயிடுவேன். அம்மாகிட்டே ! அதோ சீக்கிரமா வாங்கறா.... அம்...."

அவ்வளவுதான். ரோஸியின் குரல் அப்புறம் கேட்கவேயில்லை.

"மக......"

தேவசகாயத்தால் இதற்கு மேல் கத்த முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்து விட்டதா ? நா புரளவில்லையா ? மகளின் அசைவற்ற உடலையே நீண்டநேரம் வெறிக்கப் பார்த்தவாறு அமர்ந்தார் அவர்.

இன்று —

ரோஸியின் கன்னிமை கெடாத உடலைப் புதைக்க ஏற்பாடுகள் விரைவாக நடந்து கொண்டிருக்கின்றன. நுகராத மலரைச் சுமக்கக் கறுப்பு நிறச் சவப் பெட்டி தயாராகிக் கொண்டிருக்கிறது.

சவப் பெட்டியைப் பார்த்தவாறு யாரோ ஒருவர் சிரித்துக் கொண்டிருக்கிறாரே என்று முகத்தைச் சுளிக்காதீர்கள். ஒரே மகளைப் பறிகொடுத்து விட்டுப் பைத்தியமாகிவிட்ட தேவசகாயம்தான், உலகத்தின் போக்கை எண்ணி அப்படிச் சிரித்துக்கொண்டிருக்கிறார். ஊகிக்க முடியாத சிரிப்பு; பொருளில்லாத சிரிப்பு !

கடந்துபோன நிகழ்ச்சிகளால் சவம் போல் அப்படியே கிடந்தான் பீட்டர். ரோஸியின் உருவம் அவன் முன்னே வந்து வந்து போய்க் கொண்டிருந்தது. "பாவி! மகாபாவி ! என் பாவம் — பெண் பாவம் உன்னைச் சும்மா விடாது!" என்று அலறியது அவளது ஆத்மா;

பீட்டர் தலை மயிரைப் பிடித்துக் கொண்டான்; மோதிக் கொண்டான். தலைதெறிக்க ஓடவும் செய்தான் தேவசகாயத்தை நோக்கி.

ஞானப் பிரகாசம் பாதிரியார் செபத்தில் மூழ்கியிருந்தார். அவரது அறையிலிருந்த இரட்சகர் இயேசுவின் பாடுபட்ட சிலைக் கருகே மெழுகுவர்த்திகள் எரிந்து தேய்ந்து கொண்டிருந்தன.

சிலுவையில் தொங்கும் இயேசுவின் சிலை முன்னால் மண்டியிட்டபடி சுற்றுப்புறங்களை மறந்து போன நிலையில் இருந்தார் பாதிரியார். அவரது கரத்திலிருந்த கனத்த புத்தகத்தில் உள்ள செபங்களை, அவரது உதடுகள் நிதானமாகக் கூறிக் கொண்டிருந்தன.

அறையிலிருந்த இன்னிசை கடிகாரம் நான்கு தடவை இசை எழுப்பி ஓய்ந்தது. செபப் புத்தகத்தை அலமாரியில் வைத்து விட்டுத் திரும்பிய அவர், அறை வாயிலில், வெளுத்த முகமும், கலைந்த தலையும், கசங்கிய உடையுமாக நின்றிருந்த பீட்டரைக் கண்டு மலைத்து நின்றார். அவருக்கு இது போன்ற விஷயங்கள் சகஜமாகிவிட்டது தான். வீட்டில் யாராவது மரணப் படுக்கையில் கிடப்பார்கள். இல்லையானால் மரணச் சடங்குக்குத் தகவல் சொல்ல வருவார்கள். ஆனால், பீட்டரைப் பார்த்ததும் அவருக்கு அப்படித் தோன்றவில்லை. அவனது தோற்றமே ஏதோ விபரீதம் நடந்தாற்போலத்தான் அவருக்குக் காட்டியது.

"யாரப்பா நீ? என்ன விஷயம்? உள்ளே வா." தயங்கித் தயங்கி அவரருகில் வந்து நின்றான் பீட்டர். அவனது உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

"இப்படி உட்கார்." பாதிரியார் உட்கார்ந்து விட்டு அவனுக்கு எதிரேயிருந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டினார்.

பீட்டர் உட்காரவில்லை.

"சுவாமி ! நான் மாபெரும் பாவமொன்றைச் செய்து விட்டேன் ! உங்களிடம் பாவ சங்கீர்த்தனம் பண்ண வந்திருக்கிறேன்...."

பாதிரியார் அவனை ஒரு மாதிரியாகப் பார்த்தவாறு, தமது கைக் கடிகாரத்தைப் பார்த்து விட்டு, "இப்போது மணி நான்கு, நான் சவ அடக்கமொன்றுக்குப் போக வேண்டுமே ? நீ ஆறு மணிக்கு வந்தாயானால் கேட்டு விடுகிறேன். இல்லா விட்டால்...." என்று அவர் வார்த்தைகளை முடிக்கவில்லை. அதற்குள், "சுவாமி, இது ரொம்ப அவசரமானது ! என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை" என்றான் பீட்டர்.

பாதிரியாருக்கு அவனை எப்படிச் சமாதானப் படுத்துவதென்றே தெரியவில்லை. கடைசியில் அவனைத் தேவாலயத்துக்குள் அழைத்துச் சென்றார்.

பாவசங்கீர்த்தனக் கூண்டில் மண்டியிட்டபடி ஆதி முதல் அந்தம் வரை ஒன்றும் ஒளியாமல் மிகவும் மனஸ்தாபப்பட்டு விஷயங்களைக் கூறி முடித்தான் பீட்டர்.

பாதிரியார் நீண்டதொரு பெருமூச்சு விட்டுக் கொண்டார். பிறகு நிதானமாகச் சொல்லலானார் :

"பீட்டர், நீ ஒரு கிறிஸ்துவன், அப்பாவிப் பெண்ணொருத்தியின் வாழ்வைப் பறித்து

விட்டிருக்கிறாய்; தேவ திரவிய அனுமானமொன்றை அழித்துவிட்டாய். உன்னுடைய சுயநல இன்பங்களுக்காக, ரோஸியைப் பலி கொண்டு விட்டாய். சாத்தான் உனது உள்ளத்தில் குடியேறி விட்டான். நீ செய்த சதியினால் ரோஸி அணு அணுவாகத் துடி துடித்து இறந்திருக்கிறாள். அவளது தந்தையோ பைத்தியமாகி விட்டிருக்கிறார். இந்தப் பாவத்துக்கு மன்னிப்பே கிடையாதென்றாம். ஆனாலும், கர்த்தர் உன்னை மீண்டும் ஏற்றுக் கொள்ள வேண்டுமானால்—சாத்தான் குடியேறிய உனது இருதயத்தில் கர்த்தர் குடியேற வேண்டுமானால் ஒரே ஒரு வழி இருக்கிறது. அந்த வழி சற்றுக் கடினமானது. அந்த வழியின் மூலமாய், 'அஞ்சாமல்' உன்னுடைய பாவங்களுக்குப் பிராயச்சித்தம் தேடிக் கொள்வாயானால் உனது பாவக் கறைகள் கழுவப் பெறும்....''

இடையே பாதிரியார் பேச்சை நிறுத்தி விட்டு, முகத்தைத் துடைத்துக் கொண்டார். பாவ சங்கீர்த்தன கூண்டிலுள்ள சிறிய மின் விசிறியைச் சுழல விட்டார்.

பீட்டர் மௌனமே உருவாய் இருந்தான். பாதிரியார் மீண்டும் பேசலானார் :

''இன்று மாலை கல்லறையில், ரோஸியின் சடலம் உள்ள பெட்டி புதைக்கப்படும். சடங்குகளெல்லாம் முடிந்த பிறகு, உனக்காகச் சவப் பெட்டி தோண்டி வெளியே எடுத்துத் திறந்து வைக்கப்பட்டிருக்கும். மேசையின் மேல் மெழுகுவர்த்தியைப் பற்ற வைத்தவாறு ஜப புத்தகத்திலுள்ள ஜபங்களை உத்தம மனஸ்தாபத்தோடே கூறியபடி, பெட்டியில் உள்ள ரோஸியின் உடல் மீது, புனிதத் தீர்த்தத்தைத் தெளித்துக் கொண்டிருக்க வேண்டும். முன்னிரவு பத்து மணி முதல் பின்னிரவு நாலு மணி வரை கர்த்தரை நோக்கி உருக்கமாக ஜபித்தவாறு புனிதத் தீர்த்தத்தைப் பெட்டியில் உள்ள ரோஸியின் உடலின் மீது தெளித்துக் கொண்டிருந்தாயானால், உன் பாவங்கள் மன்னிக்கப்படும். இதுவே உனது பாவத்துக்குரிய பிராயச்சித்தம் !''

வேர்த்து விறுவிறுத்துப் போய் விட்டான் பீட்டர். உடல் சிலிர்த்தது. நெஞ்சு 'திக்திக்' என்று அடித்துக் கொண்டது. இரவில் கல்லறைக்குள், அதுவும் தன்னந் தனியாக—இதை நினைக்கும் போதே பீதி அவனைக் குலை நடுங்க வைத்தது. அவனது ஊறிப் போயிருக்கும் பாவக் கறைகள் கழுவப்பட வேண்டுமானால் பிராயச்சித்தமாக இதைச் செய்துதானே ஆக வேண்டும் ?

இரவு மணி பன்னிரண்டாகி விட்டது.

ஊர் உறங்கிக் கொண்டிருக்கும் நடு இரவு நேரமது.

ஆந்தைகளும், கோட்டான்களும், வௌவால்களும் கத்திக் கொண்டிருந்தன, அந்தக் கல்லறையெங்கும். அங்கே ஆக்கிரமித்துக் கொண்டிருந்த பயங்கர இருளைக் கல்லறையின் நடு மையத்திலிருந்த ஒரே ஒரு மின் விளக்கு தாக்குப் பிடித்துக் கொண்டிருந்தது. விளக்கின் குறைவான ஒளி இருளை அதிகப்படுத்திக் காட்டியது. நிலவு, அடிக்கடி மேகங்களிடையே போய் ஒளிந்து கொண்டிருந்தது.

உடலைச் சிலிர்க்க வைக்கும், அந்தக் குளிரில், நடுங்கிச் செத்துக் கொண்டிருந்த மனத்தைத் திடப்படுத்தியவனாய், நாற்காலியில் அமர்ந்து ஜபம் செய்து கொண்டிருந்தான் பீட்டர். மேசையின் மேலிருந்த மெழுகுவர்த்தி காற்றில் அல்லாடியது அவனது உயிரைப்போல. அவனது கண்கள் சவப் பெட்டியின், உள்ளேயிருந்த ரோஸியின் பிணத்தையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தன. பாதிரியார் 'அஞ்சாமல் ஜபம் செய்' என்று கூறிய வார்த்தைகள் அவனை அடிக்கடி விழிக்கச் செய்து கொண்டிருந்தன. திறந்த பெட்டியினுள்ளே —

அமைதி தவழும் சலனமற்ற முகத்தோடு இறந்தவளாய்க் காணப்படாமல், உறங்குபவளாய்க் கிடத்தப்பட்டிருந்தாள் ரோஸி. அவளது உள்ளத்தைப் போன்ற வெண்மையான உடைகளையே அவளுக்கு அணிவித்திருந்தார்கள். உடைக்கும் உள்ளத்துக்கும் தான் எத்தனை ஒற்றுமை ? காலைப் பனியில் குளித்த மலர் போன்ற அவளது அழகு முகம், இன்று ஜீவ களை அற்றுப் போய்த் தும்பைப் பூவைப் போல் வெளுத்துக் கிடந்தது. அவளது உடையின் மேல் பூசப்பட்டிருந்த 'சென்டி'ன் நறுமணம் பீட்டரின் நினைவைச் சிதற வைத்தது.

மெழுகுவர்த்தியின் ஒளி காற்றில் பட்டு ஆடியது. கூடவே மேசையும், நாற்காலியும், அவன் உருவமும் பிசாசுகளைப் போல் ஆடின. மேசை மேல் அவன் அவிழ்த்து வைத்திருந்த கைக் கடிகாரம் மணி ஒன்றைக் காட்டியது. உறக்கம் அவனைச் சூழ்ந்து கண்களைச் சுழற்றியது. மெல்லக் கண்களை மூடப் போனவன் பதறி அடித்துக் கொண்டு தலையைத் தட்டியபடி எழுந்து நின்றான்.

வௌவால் ஒன்று அவன் தலையின் மேல் பறந்து மெழுகுவர்த்தியைத் தட்டிவிட்டு மறைந்தது.

ரோமங்கள் குத்திட்டு நின்றவனாய் மீண்டும் மெழுகுவர்த்தியைப் பற்ற வைத்துக் கொண்டு அமர்ந்தவன், சவப் பெட்டியை உற்று நோக்கினான்.

அவனது உடல் நடுங்கியது. உடலெங்கும் 'குப்'பென்று வியர்த்து விட்டது !

என்ன அது ?

சவப் பெட்டியில் இருக்கும் ரோஸியின் வலக்கால் மெல்லத் தூக்குவது போலத் தெரிகிறதே? வெறுந் தோற்றமா ? பயந்து நடுங்கியவனாய்த் தீர்த்தத்தை அதிகமாகத் தெளித்தான் பெட்டியினுள்ளிருந்த பிணத்தின் மேல்! ஜபத்தைச் சற்று உரக்கப் படித்தான். அரண்டவன் கண்ணுக்கு எல்லாம் பேய்தான்.

இரவுப் பூச்சிகளின் 'ஙொய்' என்ற ஒலியும் அவனுடைய நடுங்கும் குரலும் போட்டியிட்டன.

மணி இரண்டுமாகி விட்டது.

எப்படியோ உள்ளூற நடுங்கிச் செத்த மனத்தை வைத்துக் கொண்டு, நான்கு மணி நேரங்களைக் கடத்தி விட்டான். ஞானப்பிரகாசம் பாதிரியார் கூறியபடி இன்னும் இரண்டே மணி நேரங்கள்தான் இருக்கின்றன, அவனது பிராயச்சித்தம் முடிய. மேசையின் மீதிருந்த மெழுகுவர்த்திகளில்

அநேகமாக முக்கால்வாசியும் தீர்ந்துவிட்டன. இன்னும் சில மெழுகுவர்த்திகளே இருந்தன.

பீட்டர் சுற்றுமுற்றும் பார்த்தபடியே ஜபித்துக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றிலும் எத்தனையோ பேர்களின் உடலை அழுக்கிக் கொண்டு, 'மனிதனின் உடல், இறுதியில் இப்படித்தான் மண்ணோடு மண்ணாகப் போகிறது' என்று பறைசாற்றிக் கொண்டிருப்பன போன்ற எண்ணற்ற வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள்! தற்செயலாக அவனது கண்கள் அருகிலிருந்த வாகை மரத்தின் மேல் பதிந்தன. அந்தக் கிளையில், மெழுகு வர்த்தியின் மங்கிய ஒளி பட்டுப் பிரதிபலித்துக் கொண்டிருக்கும் ரேடியம் போன்ற பொருள் என்ன? மயிர்க்கால்களினூடே மின்சாரம் பாய்வதைப் போன்ற உணர்ச்சி அவனது உடலெங்கும் பரவியது. திடீரென்று சடசடவென்று சிறகு அடித்துப் பறந்தது ஓர் ஆந்தை. அப்போது தான் நிம்மதியாய்ப் பெருமூச்சு விட்டான் பீட்டர்.

மணி மூன்று.

எங்கோ சேவல் ஒன்று கூவியது. கிழை வானில் மிக இலேசான வெண்மைக் கீற்றுகள். ஊதல் காற்று அவனது உடலை ஊடுருவியது. காற்றில் ஜபப் புத்தகம் படபடத்தது. பக்கங்கள் கலைந்தன.

''கர.... கர''

அது என்ன விபரீத ஒலி ?

பெட்டியினருகே வெறிக்கப் பார்த்தான். தவளையொன்று பெட்டியினுள்ளே குதிக்கத் தயாரானது போல் அமர்ந்திருந்தது. தவளையை விரட்டினான்; அது அசைவதாயில்லை. கீழே கிடந்த கல்லை எடுத்தான். இருந்தாற்போலிருந்து திடீரென்று அவன்மேல் தவளை குதித்தது. பயமடைந்தவனாய்ப் பதறியபடி எழுந்து நின்றான். அவனது அவசரத்தில் மெழுகு வர்த்தி 'பட்'டென்று அணைந்தது.

தீப்பெட்டி எங்கே ?

எளிதான பிரச்னைகள் அவனது உயிரைக் கிழித்தெறிய ஆரம்பித்தன.

என்ன துரதிர்ஷ்டம் ? கல்லறையின் நடுமையத்தில் எரிந்து கொண்டிருந்த விளக்கு அப்போது பார்த்துத்தானா அணையவேண்டும்?

அதைத் தொடர்ந்து —

எங்கும் மையையொத்தபயங்கரக்காரிருள்.

பீட்டர் தனது உருவமே தெரியாதவனாய்ப் பீதியோடு எழுந்து நின்றான். இப்போது இருளரக்கன் தனது உருவத்தைக் காட்டி அவனை மெய் நடுங்க வைத்துக் கொண்டிருந்தான். தன் பின்னால் ஏதோ ஒலி கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். வௌவால் ஒன்று இருட்டில் நின்ற அவனது முதுகில் மோதியபடி பறந்தது. ஒரு கணம் ஓடிவிடலாமா என்று நினைத்தான். மீண்டும் சவப் பெட்டியைப் பார்த்தான். அதனுள்ளிருந்த ரோஸியின் உடல் எங்கே ? கண்கள் இரண்டையும் கசக்கிவிட்டுக் கொண்டு பார்த்தான் பீட்டர். பெட்டியிலிருந்த வெள்ளை உடை தரிக்கப்பட்டிருந்த ரோஸியின் உடல் அவனது கண்களுக்குத் தென்படவில்லை. வெறும் பிரமைதானா ?

ஒரு கணம் ரோமங்கள் குத்திட்டு நின்றவன், அடுத்த விநாடி மெல்லப் பின்வாங்கத் தொடங்கி விட்டான்.

''கிர்.... கிர்.... கிர்....''

பீட்டர் இந்த அமானுஷ்யமான ஒலி கேட்டு வாகை மரத்தடியைப் பார்த்தான். அங்கே நின்று கொண்டிருக்கும் வெள்ளை உருவம்? அவனை அறியாமலேயே இரண்டடி பின் வாங்கின அவனது கால்கள்.

இப்பொழுது அவனது பார்வையில் ரோஸிதான் அவனை நோக்கிப் பயங்கரமாகச் சிரித்தாள்; பேய்ச் சிரிப்புச் சிரித்தாள்.

மரத்தடியில் நிற்கும் அந்த வெள்ளை உருவம் தன்னை நோக்கி வருகிறதா ?

''யாரது ?'' தொண்டை கிழியக் கத்தி விட்டான் பீட்டர்.

'யாரது ? யாரது ?' என்ற அவனது நடுங்கும் குரல், கல்லறையெங்கும் போய் மோதி மோதி எதிரொலித்தது !

இரத்தமே உறைந்து விடும்போல் இருந்தது அவனுக்கு. உடல் ஜன்னி கண்டவனைப் போலக் கிடுகிடு வென நடுங்கியது. மேலும் மேலும் புகை படிந்தாற் போன்ற அந்த உருவம் தன்னையே நோக்கி வருவதை அறிந்தான். அதைப் பார்க்கப் பார்க்க அவனது இருதயத்தை யாரோ சாக்கி எறிவதுபோல் உணர்ந்தான். ஏன் என் உடல் சில்லிட்டு விட்டது ? அவனது மனம் அவனைக் கேட்டுக் கொண்டது. அவனால் அங்கே நின்று கொண்டிருக்க முடியவில்லை.

அடுத்த கணம்.

''வேண்டாம்! வேண்டாம்! நான் போய் விடுகிறேன் ! என்னை விட்டு விடு ! என்னை விட்டு விடு !''

ஓடினான்! ஓடினான்! குதிகால்கள் இரண்டும் பிடரியில் படும்படி, குரல் வளையே பிளந்து விடுவது போல் கத்திக் கொண்டு ஓடினான்.

அவனது குரல் கல்லறையெங்கும் மோதி மோதி எதிரொலித்தது.

''கிரீச்!''

ஆந்தை ஒன்று பயங்கரமாக அலறியது.

அதைத் தொடர்ந்து — அந்தக் கல்லறையெங்கும் மயான அமைதி நிலவியது.

அதிகாலை.

கதிரவனின் ஒளி பட்டு மெல்ல மெல்ல உலகம் விழித்துக் கொண்டிருந்த வேளை. புள்ளினங்கள் பள்ளியெழுச்சி பாடின.

கல்லறை வாயிலின் வெளியே வந்து நின்றது ஓர் ஆஸ்டின் கார். அதிலிருந்து அவசரம் அவசரமாக இறங்கி ஓடி வந்தார் ஞானப் பிரகாசம் பாதிரியார்.

அவரது பார்வை சவப் பெட்டியின் மேல் சென்றது.

சவப் பெட்டியினுள்ளே ரோஸியின் உடல் நேற்று எப்படி வைக்கப்பட்டிருந்ததோ, அப்படியே இன்னும் இருந்தது.

சவப் பெட்டிக்குச் சற்றுத் தொலைவு தள்ளி ஒரு பெரிய கல்லறையின் மேல் மோதி மண்டை உடைந்து இறந்து கிடந்தான், பீட்டர்.

பாதிரியார் புரிந்து கொண்டார்.

# காலன் வந்தான்

டி.எஸ்.கே.

‘‘சேர்க்கப்பட்டார்களா?... நம்ம அழகிரிசாமியை ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டார்களாமே?...’’ என்று ஆரம்பித்தார், பரந்தாமன்.

‘‘அடேடே?...’’ என்று அதிர்ச்சிக் குரலில் கூறித் தம் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார், வெங்கடாச்சார்.

‘‘த்ஸொ... த்ஸொ... கேட்கும்போதே மனத்தை என்னவோ செய்யறது சார்...’’ இது கிருஷ்ணவேணி.

‘‘நாலு மாதங்களுக்கு ஒரு முறை இப்படித்தான் பிரமாதமாய் வந்து விடுகிறது. அவருக்கு. பணம் தண்ணீராய்ச் செலவாகிறது. ஹூம்...’’ என்றான் ராஜதுரை.

புண்ணியகோடி மட்டும் வாயைத் திறக்கவில்லை. ஆஸ்பத்திரியில் சேர்த்தால் என்ன, ஐயா, மனிதன் திரும்பி வராமல் போய் விடப் போகிறாரா? ‘உடம்பு சரியில்லே’ என்று அவர் லீவு எடுக்கிற ஒவ்வொரு தடவையும் நாம் எல்லோரும் வாய் வார்த்தையால் அநுதாபத்தைக் கொட்டுகிறோம். பத்து நாட்கள் கழித்து அத்தனை அநுதாபமும் வீணாகிப் போய் விடுகிறது. அழகிரிசாமி அழகாய் உடை தரித்துக் கொண்டு அலுவலகத்துக்கு வந்து விடுகிறார்!

புண்ணியகோடி அன்று மாலை வீடு திரும்பியபோது அவன் கையில் மல்லிகைச் சரமும் பிஸ்கோத்துப் பொட்டலமும் இருந்தன.

‘‘என்ன, இன்றைக்கு?’’ வியப்போடு கேட்டாள், மரகதம்.

உடனே பட்டென்று உடைத்து விடவில்லை புண்ணியகோடி. கழுக்கமாய் ஒரு சிரிப்பு. அதுவே தன்னைக் காட்டிக் கொடுத்துவிடுமோ என்ற தவிப்பில் உதடுகளை உட்புறம் மடித்து அழுத்திக் கொண்டான். என்றாலும், கண்களின் பார்வையில் வழிந்து ஓடுகிறதே. அதை எப்படி மறைப்பது?

பதினைந்து நிமிஷங்களாயிற்று.

‘‘சொல்லுங்க......’ என்று கேட்டுக் கொண்டே அவன் எதிரில் வந்து நின்றாள் அவள்.

‘‘என்னத்தைச் சொல்ல, மரகதம்?.... என்னமோ, நான் அப்புறமா சொல்றேன்னு சொன்ன மாதிரியும், அதைத் தெரிஞ்சுக்கிட்டுப் போக வந்திருக்கிற மாதிரியும்.... சொல்லுங்கங்கிறே?’’



''அப்பாவென்னு, .... எங்கிட்டச் சொல்லறத்துக்கு ஒண்ணுமில்லே?...''

''ஐயே!... இதுக்கு ஒரு சிணுங்கல்!... ஏன், மரகதம், எனக்குச் சம்பள உயர்வு வந்தால், நீ சந்தோஷப்படுவே, இல்லே?...''

''நல்லாக் கேட்டீங்க, ஒரு கேள்வி!''

புண்ணியகோடியின் உடலெங்கும் பரவிய உவகை உதட்டு முனையில் வந்து நின்றது.

''எனக்கு ஐம்பது ரூபாய் சம்பளம் உயர்கிற மாதிரி ஒரு சான்ஸ் வந்திருக்கு!''

ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கும் அழகிரிசாமியின் உடல்நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. போய்ப் பார்த்து விட்டு வந்த வைத்தியலிங்கம் கண் கலங்கக் கூறினார். அடிக்கடி நினைவு தப்பி விடுகிறதாம் ஆசாமிக்கு. அவர் அருகில் இருக்கும் அவருடைய மனைவியின் கண்களில் நீர் கொட்டிக் கொண்டே இருக்கிறதாம். டாக்டர்கள் கூட நம்பிக்கை தோன்றப் பேசவில்லையாம்.

நாளைக்கே அழகிரிசாமி 'குளோஸ்'. நாளன்றையிலிருந்து புண்ணியகோடிக்கு அவருடைய ஸ்தானம். மாதம் கிட்டத்தட்ட ஐம்பது ரூபாய் உயர்வு! ஆண்டுதோறும் தடங்கலில்லாமல் பன்னிரண்டு ரூபாய் உயர்வு!....

அந்தக் காரியாலயத்தில் அப்படி ஓர் ஏற்பாடு. முந்நூறு ரூபாய் அடிப்படைச் சம்பளத்தில் இரண்டு பேர் — பரந்தாமனும் அழகிரிசாமியும். இருநூற்று ஐம்பது ரூபாய் சம்பள விகிதத்தில் ஆறு பேர் — புண்ணியகோடியைப் போல. நூற்றறுபது ரூபாய் விகிதத்தில் பதினெட்டு எழுத்தர்கள்—ராஜதுரை, கிருஷ்ணவேணி என்று நீண்ட பட்டியல்.

புண்ணியகோடி பதினெட்டு ஆண்டுகள் மாடாய் உழைத்து, ஓடாய்த் தேய்ந்து, இருநூற்று இருபது ரூபாய் சம்பள விகிதத்தில் உச்ச நிலையை அடைந்து விட்டான். அவனுக்கு இனி ஆண்டுச் சம்பள உயர்வு கிடையாது. முந்நூறு ரூபாய் 'கிரேடி'ல் காலி ஏற்படும் வரையில் அவனுக்கு வருஷாந்திர உயர்வு இல்லையாம். அக்கிரமம்! அநீதி!

பரந்தாமனும் அழகிரிசாமியும் இருக்கிற வரையில் புண்ணியகோடிக்குச் சம்பள உயர்வாவது! கனவில்கூடக் கிடைக்காது.

அவர்கள் இருவருமே இன்னும் ஏழெட்டு ஆண்டுகள் உத்தியோகம் பார்க்கலாம். எனவே, குத்துக்கல்லாய், பூமியில் புதைந்த தேராய்ப் புண்ணியகோடி காத்துக்கொண்டிருக்க வேண்டியதுதானா? ஒரு ரூபாய்கூடச் சம்பள உயர்வு இல்லாமல் ஏழெட்டு ஆண்டுகளுக்கு அவன் உழைக்க வேண்டுமா?

வேண்டாம்!

இதோ அழகிரிசாமி மண்டையைப் போடப் போகிறார். 'முந்நூறு' சம்பளத்தில் ஒரு ஸ்தானம் காலியாகப் போகிறது. அடுத்த 'கிரேடி'ல் புண்ணியகோடிதான் ஸீனியர். அவன் 'வேண்டாம்' என்று சொன்னால் கூட, இலாகா அதிகாரிகள் விடப் போவதில்லை. 'இந்தா பிடி, சம்பள உயர்வை!' என்று அவன் மேல் திணிக்கப் போகிறார்கள்.

ஆனால், முன் தடவைகளைப் போல இந்தத் தடவையும் அழகிரிசாமி பிழைத்துக் கொண்டு விட்டால்?

சுவாமி, ஆண்டவனே! அழகிரிசாமி பிழைத்துக் கொள்ளாமல், நோய்க்கு இரையாகும்படி அருள் புரியேன். அவர் இருக்கிற வரையில் எனக்கு விமோசனம் இல்லை.... ரொம்ப அழகுதான்...! எனக்குச் சம்பள உயர்வு கிடைக்க வேண்டும் என்பதற்காக அவர் இறக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்வதா?... ஆமா...ம், நான் வேண்டிக் கொள்ளா விட்டாலும் அவர் சாகத்தான் போகிறார்; அவருடைய மனைவி, குழந்தைகள் அழத்தான் போகின்றனர். அதனால்? அவர் சாவதில் நீ இத்தனை அக்கறை காட்டுவானேன்? உன் நெஞ்சில் இரக்கம் இல்லை?... இரக்கம்! அடே போய்யா, என் பெண்ணுக்குத் திருமணம் செய்யப் போகிறேன். நீர் என்மேல் இரக்கப்பட்டு ஒரு ஐயாயிரம் ரூபாய் கொடுமேன்!... அடப் பாவி! நீ மனிதனே இல்லை.... உலகத்தில் எத்தனை பேர் மனிதர்களாக இருக்கிறார்கள்? சொல்லேன்...

புண்ணியகோடி வீட்டுக்குத் திரும்பும் வழியில் பாதை ஓரமாக ஒரு பிள்ளையார் கோவில் இருக்கிறது. அன்றைக்கு மட்டும் கோவிலை வலமாக வந்து, சன்னதியில் கைகூப்பி, கண்ணை மூடிக் கொண்டு ஆண்டவனே, அழகிரிசாமி பிழை...த்துக்...கொள்ளக்கூடா....'

கோவிலைத் தாண்டியதும் பூக்கடை. மரகதத்துக்கு வேண்டும் என்று மலர்ச் சரம் வாங்கிக் கொண்டான். குழந்தைகளுக்குப் பிஸ்கோத்து விலைக்கு வாங்கினான்.

இதயத்தில் ஒரு பிளவு: ஒரு புறம் தவிப்பு; இன்னொருபுறம் குதிப்பு!

ஐம்பது ரூபாயில் பாதியையாவது 'ரெகரிங் டிபாஸிட்'டில் போட வேண்டும். கந்தர



வல்லிக்குக் கல்யாணமென்றால் எவ்வளவோ உதவியாக இருக்கும். முதலில் சுப்பிரமணியனுக்கு ஒரு புதுச் சைக்கிள் வாங்கிக் கொடுத்தாக வேண்டும்...

''எங்க ஆபீசில் அழகிரிசாமின்னு ஒருத்தர் இருக்காரே....''

''தெரியுமே. உங்களுக்கு முட்டுக்கட்டையாக இருக்கிறவங்களிலே ஒருத்தர்னு சொல்லியிருக்கிறீங்களே?''

''அவரே தான்!... அவர் படுத்த படுக்கையாக் கிடக்கிறார்.''

''அப்படீன்னு?''

''......அவ்வளவுதான்!''

''த்சொ, த்சொ...''

அப்போது புண்ணிய கோடிக்குச் சுருக்கென்றது.

''என்ன த்சொ, த்சொ? நான் என்ன சாமிகிட்டப் பிரார்த்தனையா பண்ணிக் கிட்டேன்?... மனுஷனுக்கு நினைவு தப்பிப் போச்சுன்னு. ஆனா போக வேண்டியது தானே?''

''ஐயோ...''

''ஐயோவா?.....அம்பது ரூபாயைக் கொண்டு வந்து கையிலே கொடுக்கிறப்போ, ஐயோ அம்மாவெல்லாம் என்ன ஆகுதுன்னு பார்க்கிறேன்.''

''அதுக்குச்சொல்லலிங்க. அவரும் பிழைச்சு எழுந்திருக்கட்டும். உங்களுக்கும் பிரமோஷன் கிடைக்கட்டுமே?''

''அது நடக்கிற காரியமில்லே, மரகதம் எங்க ஆபீஸ் சட்டம் இடம் கொடுக்கலே.''

மரகதம் சமையற்கட்டை நோக்கி நடந்து சென்றாள்.

* * *

**ப**த்து நாட்கள் ஆயின.

வைத்தியலிங்கம் அலுவலகத்துக்கு வந்ததும் நான்கைந்து பேர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''எப்படி இருக்கு அழகிரிசாருக்கு?''

''தேவலையப்பா. பிழைத்துக் கொண்டு விடுவார் என்கிற நம்பிக்கை உண்டாயிருக்கு! படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொள்கிறார்...''



'' அப்பாடா! கேட்கிற போதே எவ்வளவு சந்தோஷமா யிருக்கு!...''

பென்சிலைச் சீவுகிற பாவனையில் இந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த புண்ணியகோடிக்கு உடம்பெல்லாம் பற்றி எரிந்தது. அழகிரிசாமி பிழைத்துக் கொண்டு விடுவார்! அவனுக்கு 'முந்நூறு' இல்லே!.. இப்படியே ஓய்வு பெற வேண்டியதுதான்.

காகிதங்களில் மரவட்டைகள் நெளிந்தன. பேனாவில் கருந்தேள் பளபளத்தது. இழுப்பறையில் ஒரே சலசலப்பு. டவாலியிடம் பாய்ச்சல். வேங்கடச்சாரியிடம் முறைப்பு.

மாலை நான்கு மணிக்கு மேல் இருக்கையில் இருப்புக் கொள்ளவில்லை. தலைவலி. உண்மையில் மனத்தில்வலி.

அனுமதி வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டு விட்டான். வழியில் பிள்ளையார் கோவில். சே, அதைக் கண்ணால் பார்த்தாலே பாவம்!...சாலையின் எதிர்ப்புறத்துக்குப் போய் விடலாம்.

பூம்.....பூம் .... நகர்ந்து கொண்டான், புண்ணிய கோடி.

—அடுத்த வாரம் அழகிரிசாமி ஆபீசுக்கு வந்து விடுவார்—

'கிளிங், கிளிங்...'

—நான் இதே சம்பளத்தில் உழைத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்—

'ஓரம்... ஓரம்...'

—சேச்சே, வாழ்க்கையில் இவ்வளவு பெரிய ஏமாற்றமா?...ரெகரிங் டிபாஸிட்... புது சைக்கிள்—

'பாம்ம்... பாம்ம்......'

— அட, இதென்னடா ராட்சதன் மாதிரி?....ப...ஸ்....ஸ்....ஸ்....

...ஸ்சர்ர்ர்..ர்ர்... க்க்...

* * *

''**இ**த்தாம்மா...''

அம்மா வாங்கி எண்ணிப் பார்த்தார்: அறுபத்திநாலு ரூபாய் வழக்கத்தைக்காட்டிலும் அதிகமாக இருந்தது. கண்கள் விரிய ''என்னடி கண்ணு!......பிரமோஷனு? என்னண்டை கூடச் சொல்லலியே?...'' என்றாள்.

''எனக்கே மனசு தாங்கல்லே அம்மா! புண்ணியகோடின்னு ஒரு சீனியர் கிளார்க். பஸ் விபத்திலே காலமாகி விட்டார். கீழ் 'கிரே'டில் நான்தான் சீனியர். அதனாலே என்னை உயரத் தூக்கிப் போட்டிருக்காங்களாம்.....'' என்று கிருஷ்ணவேணி கூறியதைக் கேட்டதும் அவள் அன்னைக்குப் பேச்சு எழவில்லை.




சடைய வர்மன் பராக்கிரம பாண்டியனிடம் திருக் குற்றாலத்தில் தோல்வியுற்ற பால மார்த்தாண்டன் அடர்ந்த காட்டுக்குள் ஓடி ஒளிந்து கொண்டான். எஞ்சிய தன் வீரர்களுடன் அவனைத் தேடிப் பிடித்து வருமாறு தனது தானைத் தலைவன் சிவராமத் தேவனுக்குக் கட்டளையிட்டு விட்டுப் பாண்டியன் கோநகருக்குத் திரும்பினான்.

சேரனைத் தேடி அடர்ந்த காட்டுக்குள் அலைந்து திரிந்த சிவராமத் தேவன் கடைசியில் அவனைக் கண்டுபிடிக்க முடியாமல் திரும்பிக் கொண்டிருந்தான். வழியில் சித்திரா நதிக் கரையில் எதையோ தேடிக் கொண்டிருந்த இளைஞன் ஒருவனைக் கண்டு ஐயுற்று அவனை விசாரித்தான். அவன் கூறிய செய்திகளை நம்ப முடியவில்லை. ஆகவே அவனைக் கைவிலங்கிட்டுத் தன் மன்னன் முன் கொண்டு வந்து நிறுத்தினான்.

"யார் இவன்?" பாண்டியன் கேட்டான். "சேரனைத் தேடிப் போன இடத்திலே திரிந்து கொண்டிருந்தான். விசாரிக்கையில் இவன் கூறிய விளக்கம் நம்ப முடியவில்லை. சேர நாட்டைச் சேர்ந்த ஒற்றனோ என ஐயுற்றுத் தங்கள் முன் அழைத்து வந்தேன்" என்று சிவராமத் தேவன் கூறினான்.

"சேர மன்னரைக் கண்டு பிடிக்கவில்லையா?" என மன்னன் கேட்க, "மன்னிக்க வேண்டும் மன்னவா! எத்தனையோ இடங்களில் தேடி அலைந்தோம். கடைசியில் இவ்வொற்றனே கிடைத்தான்!" என்று வருத்தத்துடன் கூறினான் தானைத் தலைவன்.

"வருந்த வேண்டாம், சிவராமா! மாறுக, மகிழ்ச்சி கொள். இத் திருக்குற்றாலம் வெற்றிக்கு நின் தோள் வலியும் தளராத மன வலியும் காரணம். அதற்கென நான் உன்னைப் பாராட்டுகிறேன். பாண்டிய நாட்டின் நன்றியை உனக்குத் தெரிவிக்கும் வாயிலாக மார்த்தாண்டனிடமிருந்து நாம் பெற்ற வரிசில் ஒன்றை உனக்கு அளிக்கிறேன். இன்று முதல் சிவராமப் பேட்டை என்று அது அழைக்கப் பெறும். நீ சென்று ஒப்பெடுத்துக் கொள். நானே இவ்வொற்றனை விசாரித்துக் கொள்கிறேன்!" எனப் பாண்

டியன் ஆணையிடவும் படைத் தலைவன் வணங்கி விடைபெற்றான்.

விசாரணை தொடங்கியது.

"இளைஞனே! சேரன் தோற்றோடி ஒளிந்து கொண்டிருக்கும் அடர்ந்த காட்டில் நீ காணப்படக் காரணம் என்ன? நீ யார்? உனக்கும் சேரனுக்கும் உள்ள தொடர்பு என்ன என்பதைக் கூறினால் — உன் கூற்றில் உண்மை இருந்தால் உனக்கு எவ்வித இடையூறும் நேராமல் விடுதலை அளிக்கிறேன்!" என்று பாண்டியன் நிதானமாகக் கூறினான்.

"வேந்தே! அரசியலுக்கு அப்பாற்பட்ட சிற்பக் கலைஞன் நான். எனது பெயர் செயதுங்கன். சேரனை நான் பார்த்ததுகூடக் கிடையாது!" என்றான்.

"அடர்ந்த கானகத்தில் எதைத் தேடினாய்?" என்று பாண்டியன் வினவினான்.

"கடவுளை!" என்று இளைஞன் கூறினான்.

இதைக் கேட்டவுடன் பாண்டியன் கலகலவென்று சிரித்து விட்டு இளைஞனை நோக்கி, "சிற்பக் கலைஞரே! உம் கலையில் காணாத கடவுளா கானகத்தில் இருக்கிறார்?" என்றான்.

"ஆம், வேந்தே! சித்திரா நதிக் கரையில் எங்கோ ஓரிடத்தில் காசி விசுவநாதன் இருக்கிறார். கூறினால் மேலும் நகைப்பீர்கள். எனினும், — நம்ப முடியாதெனினும் — நான் குற்றவாளி அல்ல என்பதை விளக்க இதைக் கூறுகிறேன்.

"எனது தந்தை ஒரு சிறந்த சிற்பி. பத்துத் திங்களுக்குமுன் தம் மாணக்கர் ஐவருடன் வடநாட்டில் உள்ள வாரணாசிக்குச் சென்றார், விசுவநாதனைத் தரிசிக்க. பல இடையூறுகளைக் கடந்து காசியை அடைந்த அவருடன் இரு மாணக்கரே எஞ்சியிருந்தனர். மூவர் வழியில் இயற்கை எய்தினர். தமது அருமை மாணக்கர் மூவரை இழந்து மனம் வருந்திய என் தந்தை தென்னாட்டின் கண் ஓரிடத்தில் காசியிருந்தால் தமிழர்களுக்கு எத்தனை சுலபம் என்ற நினைவுடன் கண்ணயர்ந்தார். அவர் கனவில் காசி விசுவநாதன் தோன்றித் தென் பாண்டிய நாட்டில் சித்திராநதிக் கரையில் தான் இருப்பதைக் கண்டு கோயிலெடுத்து வழிபடும்படி கூறி மறைந்தாராம். நெடு வழிப் பயணத்தால் நல்லுடல் நலிந்து எனது தந்தை நோய்க்கு ஆளாக அங்கேயே இறந்து விட்டார். தாம் இறப்பதற்குமுன் தமது இரு மாணக்கரையும் அழைத்து, 'என் மகனிடம் நான் கண்ட கனவைக் கூறுங்கள். விசுவநாதன் கோயில் எழுப்பி என் கடைசி ஆசையை நிறைவேற்றுங்கள்' என்று சொன்னாராம்.... அவர்கள் கூறியதைக் கேட்ட நான் எனது தந்தையின் கடைசி ஆசையை நிறைவேற்றும் பொருட்டுக் காசி விசுவநாதனைத் தேடிச் சித்திராநதிக் கரையில் திரிந்தேன்!"

"நம்புகிறேன், சிற்பியாரே! நம்புகிறேன்! சீரிய என் திருக்குற்றால வெற்றியைச் சிவனருளிய வெற்றியாகக் கருதினேன். கருதி சிவாலயம் ஒன்றை எழுப்ப எண்ணங் கொண்டேன். எனது கனவிலும் காசி விசுவநாதன் தோன்றித் தென்னாட்டில் தமக்குக் கோயில் எழுப்பும்படி ஆணையிட்டுக் கோயில் எடுக்க வேண்டிய இடத்தையும் காட்டியருளினார். என் கனவுக்கும் உம் கூற்றுக்கும் ஒற்றுமை இருக்கிறது. தாங்களே முன் நின்று இக்கோயில் எடுக்கும் திருப்பணியை ஏற்க வேண்டும்!" எனக் கூறித் தமது இருக்கையிலிருந்து எழுந்து வந்து தானே சிற்பியின் கை விலங்கை அகற்றிச் சிற்பியின் கரங்களை அன்போடு பற்றினான் பாண்டிய மன்னன்.

ஆண்டுகள் ஐந்து கடந்தன. ஆலயம் மெள்ள மெள்ள வளர்ந்தது. சிற்பி செயதுங்கனும், அவன் தந்தையின் மாணக்கர் இருவரும் பாண்டிய நாட்டில் உள்ள மற்றச் சிற்பிகளும் தத்தம் கைத் திறனை—கற்பனை வளத்தைக் கல்லிலே காட்டிக் கலை உருவங்கள் சமைத்தனர். ஆலயப் பணியைக் காணப் பாண்டியன் அடிக்கடி வந்து சென்றான்.

ஒரு நாள் மன்னன் ஆலயப் பணியைக் காண வந்தான். சிற்பி செயதுங்கன் மன்னனை வரவேற்றுச் சுற்றிலும் கொண்டு காட்டினான்.

"சிற்பியாரே! விசுவநாதன் ஆலயம் வளர்ந்து வரும் நிலை கண்டு மகிழ்ச்சி எய்துகிறேன். எனினும், ஏதோ ஒரு பெருங் குறை இருந்து வருகிறது என் மனத்தில்!" என்றான் மன்னவன்.

"ஆம்! தமிழகத்தில் உள்ள காசியில் தமிழணங்கின் சிலைகள் இரண்டு இருப்பது அவசியம். அச்சிலைகளை நம்மிடம் பணியாற்றும் ஆடலணங்குகளின் உருவ அமைப்பில் உருவாக்கக் கூடாது. ஏனெனில், பொருளுக்காகப் பணி புரியும் அவர்கள் முகத்தில் கடமையின் சாயல் படிந்திருக்குமே தவிர, தமிழணங்கின் வீரம் — மான உணர்வு — கனிவு இருக்காது. எனவே, ஒழுக்கமும் நற்குடிப் பிறப்பும், எழிலும் வாய்ந்த ஒருத்தியை அபிநயம் பிடிக்க வைத்து அதைக் கொண்டு தமிழணங்கின் சிலை சமைக்க வேண்டும்!" என்று தன் எண்ணத்தைச் செயதுங்கன் கூறினான்.

"ஆம், சிற்பியாரே! தமிழணங்கின் சிலைகளில் இரண்டு விசுவநாதன் ஆலயத்தில் இருப்பது அவசியம். எழிலரசியாய், ஏற்ற மிகு குடியில் பிறந்தவளாய் உள்ள பெண் ஒருத்தியை இதற்கு அபிநயம் பிடிக்கச் சொல்லி அதை வைத்துச் சிலை வடிக்க வேண்டும். நீங்கள் தமிழணங்குக்குத் தக்கவள் ஒருத்தியைத் தேடும் முயற்சியில் ஈடுபடின் ஆலயப் பணி தடைபடும். நானே எனது அமைச்சரைக் கொண்டு தேடி வரச் செய்கிறேன்! மீண்டும் நாளை சந்திக்கலாம்!" என்று கூறி விட்டுப் பாண்டியன் அங்கிருந்து அகன்றான்.

ஆலயப் பெரும் பணி வளர்ந்து கொண்டிருந்தது.

ஆறு திங்களாகியும் அமைச்சர் திரும்பாததை நினைத்துச் சடையவர்மன் பராக்கிரம பாண்டியனும், சிற்பி செயதுங்கனும் கவலையுடன் இருந்தனர். அவர்களின் பேச்சின் இலக்காய்த் திகழ்ந்த அமைச்சர்

அருள் தம்பி அப்போது அங்கு வந்து சேர்ந்ததும் அவர்கள் முகம் மலர்ந்தது.

''அமைச்சரே! நீண்ட நாட்களுக்குப் பின் இன்றுதான் நெஞ்சில் அமைதி பிறக்கிறது! எங்கே தமிழணங்கு ?'' எனக் கேட்டான் மன்னன். தயங்கி நின்றார் அமைச்சர்.

'' பொருத்தமானவள் கிடைக்க வில்லையா ?'' எனக் கவலையுடன் வினவினான் செயதுங்கன்.

''கிடைத்திருக்கிறாள் சிற்பியாரே! ஆனால் அவள் நாம் இடும் பணியை ஏற்பாளோ, மாட்டாளோ என அஞ்சுகிறேன் !'' என்றார் அமைச்சர்.

''அவளை இதற்கு இணங்க வைக்க எந்த வழியும் இல்லையா ?'' எனச் சிற்பி கேட்க, ''வழி இருக்கிறது. அதற்கு நீங்கள் உங்களைத் தியாகம் செய்ய வேண்டும்!'' என்றார் அமைச்சர்.

''நமது பணிக்கு அவள் உதவினால் அவளுக்கு வாழ்வளிக்க நான் ஒப்புதல் தருவேன்!'' என்று சிற்பி கூறினார்.

''அவளுக்குச் சிற்பி செயதுங்கனாக நீங்கள் வாழ்வளிக்கக் கூடாது. அவள் மாமன் மகனாக வாழ்வளிக்க வேண்டும் !'' என்று அமைச்சர் புதிர் போட்டார்.

''மாமன் மகனாகவா ? என்ன புதிர் போடுகிறீர்கள்?'' என்று புரியாமல் விழித்தான் சிற்பி.

''எனக்கும் புரியவில்லை, அமைச்சரே !'' என்று மன்னனும் கூறினான்.

''அவள் மாமன் மகன் சிறு வயதில் அவ்வூரை விட்டுப் போய் விட்டான்.

''அவன் வருவான் என எதிர்பார்த்து நம்பிக்கையுடன் காத்திருக்கிறாள் அவள். நீங்கள் 'உன் மாமன் மகன் நான்தான்' எனக் கூறிச் சென்றால் நம்பி விடுவாள். உங்கள் திறமையைக் கையாண்டு தேவையான அபிநயத்தை வரவழைத்துக் கொள்ளலாம். ஆலயப் பணி முடிந்ததும் அவளின் துணைவனும் ஆகலாம்!'' என்று விளக்கினார் அமைச்சர்.

''அது வஞ்சனைச் செயல் அல்லவா ?'', என்றான் சிற்பி.

''நீங்கள் அவள் மாமன் மகனாக நடிப்பதால் நம் முயற்சியும் வெற்றி பெறும்; அவள் வாழ்வும் மலரும் ! அவள் மாமன் மகன் என்றும் திரும்பப் போவதில்லை. இதனால் அவள் வாழ்வு நிலவு காணா வானம் போல் இனிமை காணமலே முடியும்!'' என்று கூறினார் அமைச்சர்.

''அமைச்சர் கூற்றில் நியாயம் இருக்கிறது. சிற்பியாரால் ஏற்க இயலாதெனில் விட்டு விடுவோம், தமிழணங்கின் சிலை செய்யும் முயற்சியையும்கூட !'' என்று கூறி விட்டு அரசன் அங்கிருந்து அகன்றான். அமைச்சரும் சிற்பியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு நின்றனர்.

''தமிழணங்கின் சிலை இருந்தால்தான் இக்கோயில் நிறைவெய்தும். அது நிறைவெய்தினால்தான் என் மனமும் எனது தந்தை எனக்கிட்ட கடைசிக் கட்டளையும் நிறைவெய்தும். எனவே, அமைச்சரே ! நான் இப்பெரும் பழியை — பாவத்தைச் சுமக்க முன் வருகிறேன் !'' என்று சிற்பி கூறினான்.

''நற்பலனைச் சுமக்க என்று கூறுங்கள்!'' என்று முடித்தார் அமைச்சர்.

**மா**லை நேரம் மறைந்துகொண்டிருந்தது. மேற்கு வானில் வண்ணக் கோலங்கள் கரைந்து கொண்டிருந்தன. இரவும் பகலும் சந்திக்கும் அந்த நேரத்தில்....

''இதோ, இந்த வீடுதான்!'' என்று சுட்டிக்காட்டிவிட்டுச் செயதுங்களிடமிருந்து விடைபெற்றார் ஒருவர். ''மிக்க நன்றி !'' என்று கூறி விடையளித்தான் செயதுங்கன்.

பேச்சுக் குரல் கேட்டு வீட்டின் வாயிலுக்கு வந்த அமுதவல்லி தன் வீட்டின் முன்

## மலர்ச்சி

இளங்கம்பன்

இன்பப்பெருக்குடன் ஈந்திடும் வேளையில்
இதயம் மலருது - எழில்
கன்றும் ஆவுமுள்ள காட்சியினைக் காணக்
கருணை மலருது

கண்கள் கலந்திடக் கருத்தும் இசைந்திடக்
காதல் மலருது - தூய
பண்புகள் ஓங்கிட பக்குவம் தேங்கிட
பக்தி மலருது

காணும் அழகினில் கண்கள் குளித்திடக்
கவிதை மலருது - அகல்
வானம் வழங்கிடும் வண்மையைநோக்கியே
வாழ்வும் மலருது.



எழிலார்ந்த இளைஞன் ஒருவன் நிற்பதைப் பார்த்துத் திடுக்கிட்டாள்.

''யார் நீங்கள்? யாரைப் பார்க்க வேண்டும்?'' எனக் கேட்டாள்.

''பேச்சிமுத்து என்பவர் வீடுதானே இது? அவரைப் பார்க்க வேண்டும்!'' என்று கூறி விட்டுத் திண்ணையில் அமர்ந்தான் செயதுங்கன்.

'' அவர் இறந்து இரண்டு ஆண்டுகள் ஆகின்றனவே !'' என்றாள் அமுதவல்லி.

'' ஆ! எனதருமைப் பாட்டன் இறந்து விட்டாரா ? என்ன கொடுமை?'' என்று முகத்தில் அடித்துக் கொண்டான் செயதுங்கன்.

''நான் எனது பாட்டனைத் தேடி வந்தேன். வந்த எனக்குப் பேரிடி கிடைத்தது. எனது பாட்டனின் வீட்டில் வேறு யாரோ இருப்பதை அறிந்தேன். பரவாயில்லை, நான் வருகிறேன்!'' என்று கூறிவிட்டு வந்த வழியே திரும்ப முயன்றான் — இல்லை திரும்ப முயல்வதாக நடித்தான்.

''வேறு யாருமல்ல, நாங்கள்! நான் உன் அத்தையடா ! உனது தந்தையின் உடன் பிறப்பு!'' என்று கூறியபடி வீட்டுக் குள்ளிருந்து வெளியே வந்த மூதாட்டி அவனை உள்ளே வரும்படி அழைத்தாள்.

''அத்தையா ! அப்படியென்றால் சற்று முன் இங்கு நான் கண்ட பேரெழிலாள்?''

''என் மகள்'' என்று விளக்கினாள். செயதுங்கன் மிகுந்த மகிழ்ச்சியுடன் உள்ளே நுழைந்தான்.

''தம்பி, உன் தந்தை — என் அண்ணன் நலமாக இருக்கிறாரா ?'' என வினவினாள்.

''அவர் இயற்கை எய்தி விட்டாரம்மா ! சாகுமுன் என்னை அழைத்து 'உன் பாட்டன் பண்பொழில் என்ற ஊரில் வசிக்கிறார். பேச்சிமுத்து என்ற பெயருடையவர். அவரிடம் கருத்து வேற்றுமை கொண்டதால் நான் உனக்கு ஐந்து வயதாகும்பொழுது உன்னையும் அழைத்துக் கொண்டு அவரிடமிருந்து பிரிந்து வந்து விட்டேன். இன்று வரை உனக்கு இதை நான் சொல்லவில்லை. எனது தவற்றை இப்பொழுதுதான் உணர்கிறேன். உணர்ந்தும் பயனில்லை. நீ பண்பொழில் சென்று நான் எனது தந்தைக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய். என்னை மன்னித்துவிடச் சொல்' என்று கூறினார். தமக்கு ஒரு தங்கை இருப்பதாகவும் அவள் பாண்டியனின் படையில் பணியாற்றும் ஒரு வீரரை மணந்ததாகவும் கூறினார். தம் தங்கைக்கு இப்படி ஓர் அழகான மகள் இருக்கிறாள் என்று மட்டும் சொல்லவில்லை!'' என்றான்.

''இவள் பிறந்த பொழுது அண்ணன் இவ்வூரை விட்டு உன்னுடன் வெளியேறி ஆறு திங்களாகி இருந்தன. அதனால் தெரியாது'' என்றாள் அம்மூதியவள்.

மறு நாள் காலை எழுந்ததும் செயதுங்கன் புறப்பட ஆயத்தமானான். ''எங்கே தம்பி, புறப்படுகிறாய்?'' என்று அமுதவல்லியின் அன்னை கேட்டாள்.

''இனி இவ்வூரில் எனக்கு என்ன கடமை இருக்கிறதம்மா ? தாத்தா இறந்து விட்ட தால் தந்தை எனக்குக் கொடுத்திருந்த கடமையைச் செய்ய முடியாமல் போய்விட்டது. இத்தனை நாள் சுற்றியது போல் இனியும் பல நாடுகளைச் சுற்றக் கிளம்புகிறேன் !'' என்றான் செயதுங்கன்.

''இங்கே உனக்குக் கடமை இருக்கிறது தம்பி. உன் தாத்தா போய் விட்டார். அவர் விட்டுச் சென்ற கடமைகளை நீதான் இனி நிறைவேற்ற வேண்டும். நீ என்றாவது திரும்பி வருவாய், அமுதவல்லியை உனக்கு மணம் முடித்து வைக்கலாம் என்று அவர் நினைத்திருந்தார். அந்த ஆசையை நீ நிறைவேற்ற வேண்டாமா ?'' என்று கேட்டாள்.

''அம்மா ! அவருக்கு இங்கு தங்கியிருக்க விருப்பமில்லையெனில் அவரைத் தடுக்கவேண்டாம் !'' என்று கூறும் பொழுதே அமுதவல்லிக்குக் கண்ணீர் வந்து விட்டது. அவள் வருத்தத்தை அவள் குரலிலிருந்தே அறிந்து கொண்ட செயதுங்கன் தானும் பண்பு வாய்ந்த பெண்ணை ஏமாற்ற நாடகம் ஆடுகிறோமே என்று எண்ணி மறுகினான்.

''சரியம்மா ! இங்கேயே இருக்கிறேன்!'' என்று கூறிவிட்டு அமர்ந்தான். தாயும் மகளும் மகிழ்ந்தனர். நான்கு நாட்கள் அமுதவல்லியின் வெட்கத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக நகர்த்திவிட்டு நகர்ந்தன. செயதுங்கனிடம் அமுதவல்லி நெருங்கிப் பழகத் தொடங்கினாள்.

ஐந்தாம் நாள்... கட்டிலில் அமர்ந்திருந்தான் செயதுங்கன். தரையில் அமர்ந்தாள் அமுதவல்லி. இப்பொழுதெல்லாம் சகஜமாக அவனுடன் பேசினாள்.

''எந்த நாடுகளில் எல்லாம் இருந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''பல நாடுகளில். அதிலும் கடைசியாகச் சேர நாட்டில் இருந்தேன். அங்கிருந்து இங்கு வரவே மனமில்லை. தாத்தாவைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையால் வந்தேன் !'' என்றான்.

சேரநாடு என்ற பெயரைக் கேட்டதும் முகம் சுளித்தாள் அமுதவல்லி. தாய்நாட்டுப் பற்று அப்படிச் செய்ய வைத்தது.

''ஏன் முகம் சுளிக்கிறாய்?'' என்று கேட்டான் செயதுங்கன்.

''பாண்டிய நாட்டில் பிறந்த நீங்கள்— சேர நாட்டில் — அது பாண்டிய நாட்டுடன் போர் தொடுத்த பின்னும் விரும்பித் தங்கியிருந்திர்களே ! அதை நினைத்துத்தான் !'' என்றாள் அமுதவல்லி.

''நாட்டுப் பித்துக்கு அப்பாற்பட்டவன் நான். அதிலும் சேர நாட்டில் உள்ள எழிலைக் கண்டவர்கள் — அனுபவித்தவர்கள் பிறநாட்டுக்குச் செல்ல விரும்புவதில்லை !'' என்றான்.

''அங்கு அப்படி என்ன எழிலைக் கண்டு விட்டீர்கள்?'' என்றாள் கோபத்துடன்.

''சேரநாட்டில் உள்ள ஒவ்வொரு பொருளும் எழில் வாய்ந்ததுதான். அதிலும் சேர நாட்டுச் சேழியர் சிறந்த எழில் வாய்ந்தவர்கள்!'' என்றான்.

''பாண்டிய நாட்டில் மட்டும் இல்லையா?'' என்று கேட்டாள். தன்னைப் பார்த்த பின்னும் இந்த ஐயம் எப்படி எழுந்தது அவர் மனத்தில் என்ற எண்ணமும் அவளிடம் எழுந்தது.

''இருக்கலாம். ஆனால் எழிலுக்கு எழிலூட்டும் கலை அவர்களுக்கே தெரிந்தது. வீண் பெருமைப்பட்டு என்ன பயன்? அவர்களைப் போல் அழகாகத் திலகம் வைத்துக் கொள்ளக்கூடத் தெரியாது பாண்டிய நாட்டுப் பாவையருக்கு!'' என்று அவளைச் சீண்டி விட்டான்.

''ஏன், தெரியாது? இதோ நான் உங்கள் முன்னாலேயே தெரியும் என நிரூபித்துக் காட்டுகிறேன்!'' என வீம்புடன் கூறி விட்டு எழுந்து சென்றாள். மீண்டவள் கையில் வட்டமான ஆடியிருந்தது. வண்ணக் குங்குமச் சிமிழ் இருந்தது. அவன் முன்னால் நின்றாள். தன் காந்தள் மெல்விரலால் கருத்துடன் தன் பிறைநுதலில் திலகம் வைத்துக் கொள்ளத் தயாரானாள். அவள் இடது கையில் ஆடி இருந்தது. வலக் கையின் விரல்கள் பிறை நுதலில் தன் கடமை யாற்றத் தொடங்கின. இக்காட்சியை வரவழைக்க இத்தனை நேரம் முயன்று வெற்றி பெற்ற சிற்பி செயதுங்கன் தன் கருத்தில் அவள் நின்ற நிலையை — முயன்ற செயலைப் பதித்துக் கொண்டான்.

''அற்புதம்! அற்புதம்!'' என்று புகழ்ந்தான் பாண்டிய மன்னன். அவன் முன் தமிழணங்கின் சிலை நின்றிருந்தது. கையிலே ஆடி ஏந்திக் காந்தள் மென் விரலால் கருத்துடன் திலகம் வைத்துக் கொண்டு நின்றது அச்சிலை.

''சிலை இவ்வளவு சிறப்பாக இருக்கும் என்று நான்கூட எதிர்பார்க்கவில்லை!'' என்று பாராட்டினார் அமைச்சர்.

''இக்கோயில் உள்ள அளவும் சிற்பியின் கைவண்ணம் நிலைத்திருக்கும். எந்நாளும் மக்கள் இச்சிலை வடித்த சிற்பியைப் புகழ்வார்கள்! மனம் நிறைந்த பாராட்டுக்கள்!'' என்று சிற்பியின் கரங்களை அன்புடன் பற்றினான் பாண்டியன்.

''அடுத்த சிலை?'' என்று நினைவூட்டினான் மன்னன்.

''இன்னும் சில நாட்களில் உருப்பெறும். அவளைப் பிரிந்து நான் வந்து பதினைந்து நாட்கள் ஆகின்றன. மீண்டும் நாளை சந்திக்கவிருக்கிறேன்!'' என்றான் சிற்பி.

மன்னனும் அமைச்சரும் அங்கிருந்து அகன்றனர். சில பொருள்களைச் சேகரித்துக் கொண்டு சிற்பி செயதுங்கனும் பண்பொழிலுக்குப் பயணமானான்.

''இத்தனை நாட்களா?'' என்று கோபத்துடன் செயதுங்கனை வரவேற்றாள் அமுதவல்லி. ''எத்தனை நாட்கள்? பதினைந்து நாட்கள்தானே?'' என்று கூறிவிட்டு அமர்ந்தான் செயதுங்கன்.

''கேவலம் இரண்டு மூன்று உளிகளை எடுத்து வருவதற்கா நெடுந் தொலைவு சென்றீர்கள்?'' எனக் கேட்டாள் அமுதவல்லி.

''இவ்வுளிகள் அவ்வளவு சாதாரணமானவை அல்ல, நீ நினைப்பது போல். தக்க சமயம் வரும் பொழுது இதன் அருமையை நீ உணர்வாய்!'' என்று பதில் அளித்தான் செயதுங்கன்.

## உவகை தரும் உவமை

கணக்கில்லாத பொருள்களை வாங்கி வாங்கிச் சென்றாலும் குறையாமலும், அதே போலக் கணக்கில்லாத பொருள்களை மேலும் மேலும் கொண்டு வந்து கொட்டினாலும், மிகுந்து போகாமலும் இருக்கும் மதுரைக் கடை வீதியானது; எண்ணில் அடங்காத மேகங்கள் வந்து



வந்து நீரை உறிஞ்சி உறிஞ்சி அளவில்லாமல் எடுத்துச் சென்றாலும் குறையாமலும் அதே போல் எண்ண முடியாத ஆறுகள் வந்து வந்து அளவில்லாத நீரைப் பாய்ச்சினாலும், நிறைந்து வழிந்து போகாமலும் இருக்கும் கடலைப் போன்றதாகும்!

- மதுரைக் காஞ்சி - மாங்குடி மருதனார்

---

''வந்ததும் அவனுடன் விவாதத்தில் இறங்கி விட்டாய் அல்லவா?'' என்று மகளைக் கடிந்து கொண்டாள் தாயார்.

''விவாதிக்கட்டுமே! விவாகத்துக்குப்பின் விவாதிக்க அவனுக்கு நேரம் இருக்காதே!'' என்று கூறிச் சிரித்தான் செயதுங்கன்.

தரையை நோக்கினாள் அவள். அவள் எழில் நோக்கினான் அவன். இப்படிப்பட்ட எழில் வாய்ந்தவளை வாழ்க்கைத் துணைவியாக அடையவிருக்கும் தன் பெரும் பேற்றை எண்ணி மகிழ்ந்து, அத்தகைய வாய்ப்பை ஏற்படுத்திய அமைச்சருக்கும் மனத்தால் நன்றி கூறினான்.

''என்ன பார்க்கிறீர்கள்?'' என்று ஆவலுடன் கேட்டாள் அமுதவல்லி.

''கவிதையைக் கற்றுக் கொடுக்கும் நின் கருவிழிகள் காவியம் கற்றது எங்கே என அறிய அவற்றைப் பார்க்கிறேன் அமுதா!''

''அறிந்தீர்களா?''

''ஆம்! குவிந்திடும் கமல மலரிடம் கற்றிருக்கலாம் — இல்லை குளிர்புனல் குமுதத்திடம் கற்றிருக்கலாம். அமுதா! உன் முன் நிற்கும் என்னிடம் கவிதை பிறக்கிறது. கற்பனை சிறகடித்துப் பறக்கிறது. உன் எழிலைப் பாட்டில் வடித்தால் எத்துணை சிறப்பாக இருக்கும்? அதைப் படித்தவர்களெல்லாம் பாராட்டுவார்களே!'' என்றான்.

''அப்படி எதுவும் செய்து விடாதீர்கள். என் எழிலை நீங்கள் பார்ப்பதோடு நிறுத்திக்

கொள்ளுங்கள்: அதைப் பாட்டில் வடித்துப் பலரிடம் காட்டிப் பலரின் ரசிகைக்கு — பாராட்டுக்கு அதை உட்படுத்தினாலும் என்னால் அந்த, அவமானத்தைத் தாங்க இயலாது!'' எனக் கூறி அவன் மார்பில் தன் மலர் முகம் பதித்தாள். 'இத்தகைய மனோபாவம் கொண்ட இவனுடைய உருவச்சிலை பலர் பார்க்குமிடத்தில் இருப்பதை அவன் அறிந்தால்......?' நினைக்கவே அவள் நெஞ்சம் நடுங்கியது.

''அதைவிடச் சிறப்பான சிலை இது!'' என்று கூறி மகிழ்ந்தான் மன்னன்.

''இத்தகைய எழில் வாய்ந்த சிலைகள் வேறு எங்கும் இருக்க முடியாது!'' என்று புகழ்ந்தார் அமைச்சர். ''சிற்பியாரே! கோயில் பணி முற்றுப் பெற்று விட்டது. கோபுரத்தில் பதினேழாம் நிலையில் சிலைகள் செதுக்குவதே கடைசியாகத் தாங்கள் செய்யவிருக்கும் பணி. தங்களுக்கு ஆறு ஊர்களையும், தேவையான பொன்னையும் பரிசளிக்கப் போகிறேன். இக் கோயில் திறப்பு விழாவன்று தங்களுக்குத் திருமணம் நடக்கலாம். அதுவே இரட்டிப்புச் சிறப்பாக இருக்கும்! அதற்கு முன் வழக்கப்படி தங்களுக்கு அப் பெண்ணைப் பேசி முடிக்க நானும் அமைச்சரும் நேரிலே செல்லவிருக்கிறோம்!'' என்று தன் திட்டத்தைக் கூறினான் மன்னன்.

''நான் செய்த பேறு மன்னா!'' என்று அடக்கத்துடன் கூறினான் சிற்பி.

''நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?'' என்று திகைப்புடன் கேட்டாள் அமுதவல்லி.

''இனி நீ எதிர்பார்க்கும் மாமன் மகன் எட்டாக்கனியாகி விட்டான். பாண்டியன் எடுக்கும் ஆலயத்தின் தலைமைச் சிற்பி அவன். பொன்னும் பொருளும் பரிசிலாக அடைந்து பெரிய பிரபுவாகி விட்டான். அதனால் அமுதா, நீ அவனை மறந்து விடு. என் மகனை மணந்துகொள்!'' என்று கூறினார் அவர். முன்பு அமைச்சரிடம் அமுதாவைப் பற்றிய விவரங்களைக் கூறியவர் இவர். அவரிடம் தம் மகனுக்கு அவள் கிடைக்காத எட்டாக் கனியாகி விட்டாள் என்று தாபப்பட்டவர் இவர்தான்.

''நான் மாட்டேன். எத்தனை உயர்வை அடைந்தாலும் என் அத்தான் என்னைக் கைவிட மாட்டார்!'' என்று உறுதியாகக் கூறினாள் அமுதவல்லி.

''நானே நேரில் பார்த்தேன். அவன் உன்னுடன் பழகியதைப் பார்த்த பின் அவன் உன் உண்மையான மாமன் மகனா என்பதை அறிய அவனைப் பின்தொடர்ந்தேன். ஆனால் அதை அறிய என்னால் முடியாமல் போயிற்று. என்றாலும் உன்னை வைத்து அவன் பலனடைந்ததைக் காண முடிந்தது. உன் உருவச் சிலைகளைச் செதுக்கிக் கோயிலில் வைத்திருக்கிறான். கையில் ஆடி ஏந்தித் திலகம் வைத்துக் கொண்டிருக்கிறது ஒரு சிலை... கருத்தை எங்கோ செல்ல விட்டுச் சிந்தை வயப்பட்டு நிற்கிறது மற்றொரு சிலை. இரு கண்களாலும் பார்த்தேன். அவனுக்கு உன் மேல் உண்மையான அன்பிருந்தால் — பலர் பார்க்குமிடத்தில் தன் காதலியின் உருவச் சிலை இருப்பதை அனுமதிப்பானா? எனவே கூறுகிறேன்!'' என்று வற்புறுத்தினார் அவர்.

''நானே நேரில் சென்று பார்க்கிறேன். நீங்கள் கூறுவது உண்மையாக இருக்குமானால் அங்கேயே உயிரை விட்டு விடுவேன். என் தன்மான உணர்வை அப்பொழுதாவது உணர்ந்து கொள்ளுங்கள்!'' என்று கூறிவிட்டு வேகமாக ஓடத் தொடங்கினாள் அமுதவல்லி.

கோயில் கோபுரத்தில் பதினேழாம் நிலை உருப் பெற்றுக் கொண்டிருக்கிறது. சிற்பி செயதுங்கனும் மற்றவர்களும் கருத்துடன் பணியாற்றிக் கொண்டிருந்தனர். பாண்டியனும் அமைச்சரும் தமிழணங்கின் சிலையருகில் நின்று அதைப் பற்றியே வியந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் முன் ஒரு பெண் வந்து நின்றாள். வேகமாக ஓடி வந்ததால் அவள் மார்பு ஏறி இறங்கியது. அச்சிலைகள் இரண்டையும் பார்த்தாள். தான் வஞ்சிக்கப்பட்டோம் என்பதை அறிந்தாள். ஆர்ப்பரித்தெழுந்தாள்.

''துரோகி!'' என்று கத்தினாள். அவள் கத்திய பின்னர்தான் மன்னனும் அமைச்சரும் அவளைக் கவனித்தனர்.

''யார் இந்தப் பெண்?'' என்று வீரர்களைப் பார்த்துக் கர்ஜித்தான் மன்னன்.

''இவள்தான் மன்னா இச்சிலைக்கு உருவம் தந்தவள்!'' என்று கூறினார் அமைச்சர். மன்னனிடமிருந்த கடுமை மறைந்தது. கவலை நிறைந்தது.

''உனக்கு இப்பாண்டிய நாடே மிகவும் கடமைப்பட்டிருக்கிறதம்மா!'' என்று கூறினான் மன்னன்.

''இச்சிலையால் என் மானம் போய்விட்டதே அதற்காகவா?'' என்று ஆத்திரத்துடன் கேட்டாள் அமுதவல்லி.

''மானம் போகவில்லையம்மா. மாபெரும் புகழ் சேர்ந்திருக்கிறது!'' என்று மன்னன் அவளைச் சமாதானப்படுத்த முயன்றான்.

''ஆமாம். இச்சிலை செய்தவருக்குச் சேர்ந்திருக்கிறது. இக் கோயில் எடுத்தவருக்குச் சேர்ந்திருக்கிறது. மன்னவனே! ஒரு பெண்ணின் தன்மானத்தை அடகு வைத்துச் சேர்த்த உங்கள் புகழ் நிலைக்காது. நம்பியவளை மோசம் செய்த அந்தச் சிற்பியின் புகழும் நிலைக்காது. ஒரு பெண்ணின் இதயத்தை நோக வைத்து எழில் பெற்ற இவ்வாலயம் நிலைக்காது. நான் தூயவள் என்பது உண்மையானால் இக் கோயில் தன் எழில் இழக்கட்டும்!'' எனச் சபித்தாள்.

இவள் குரல் கோபுரத்தின் பதினேழாம் நிலையில் பணியாற்றிக் கொண்டிருந்த சிற்பி செயதுங்கனின் செவிகளில் மோதியது. திரும்பிப் பார்த்தான். அமுதவல்லி சிலைகளுக்கு அருகில் நின்று சபதமிடுவதைக் கேட்டான். பெண்ணின் இதயத்தைப் பிளந்த பெரும் பழிக்கு ஆளானோமே என எண்ணி மனமொடிந்தான். அவன் நெஞ்சம் நடுங்கியது. கால்கள் தடுமாறின. அப்படியே கீழே விழுந்து விட்டான். அவன்

விழும்பொழுதுதான் அமுதவல்லியின் வாயி லிருந்து சாபமும் வெளிப்பட்டது. செய துங்கன் உடல் தெறிவிட்டது. அவன் நிலை கண்ட அமுதவல்லியும் வேரிழந்த மரம் போல் நிலத்தில் சாய்ந்தாள். அவள் சாயும் போது கோபுரமும் சரிந்தது.

சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் பதை பதைத்தான். அமுதவல்லியின் பொற் பாதத்தைப் பிடித்துக் கொண்டு மன்னிக் கும்படி கதறினான். கோபுரம் விழுந்த தால் எழுந்த புழுதி காற்றில் அவன் கதறல் கலந்து கொண்டிருந்தது.

# வட்டமேஜை

"மூந்திரிக்குப் போட்டி...." என்ற கட் டுரையில் ஆசிரியர் ஒரு தவறான செய்தியைச் சொல்லியுள்ளார். மூந்திரிப் பருப்புக்கு, 'காஷ்யூநட்' என்ற பெயர் இடப்பட்ட இடமே சென்னை என்பது தவறு. 'காஷ்யூ நட்' என்ற பெயர் பிறந்த இடம் கேரள மாநிலம் ஆகும்.

திருவனந்தபுரம் பகுதிக்கு வந்த ஆங்கி லேயன் 'அண்டி' விற்கும் மலையாளத்துப் பெண்ணிடம் 'இது என்ன?' என்று கேட்க, ஆங்கிலம் அறியாத அவள், வழக்கம் போல் "காசினெ எட்டெ" (காசுக்கு எட்டு என்று பொருள்) என்று பதில் கூற, மலையாளம் புரியாத ஆங்கிலேயன் அதுவே பெயர் என எண்ணி, "காஷினெ எட்டெ" — "காஷி னெட்" எனக் கூற மூந்திரிப்பருப்புக்கு ஆங்கிலப் பெயர் பிறந்தது என்பது கன்னியா குமரி — கேரள மக்கள் அறிந்த உண்மை. இதனைக் கேள்விப்பட்டுள்ள ஆசிரியர் என்ன காரணமோ கதையைச் சென்னைக்கு மாற்றி விட்டார். ஆசிரியர் குறிப்பிடும் காலத்தில் சென்னைப் பகுதியில் சிறிய நாணயங்களுக்கு "சல்லி, துட்டு" என்ற பெயர்கள்தான் வழக்கிலிருந்தன. "காசு" அல்ல.

குன்னூர்-2
9—7—69      ஜி. தாண்டேசுவரன்

"அம்பிகையின் அருளும் அருவியின் எழி லும்" என்ற கட்டுரை படிக்க நேர்ந்தது. கட்டுரை மிகவும் சுவையாக இருந்தது. இருப்பினும் கட்டுரையினூடே ஓரிடத்தில் ஒரு சிறு தவறு புகுந்திருப்பதைக் காண்கிறேன்.

'தீபாராதனை முடிந்து வணங்கிக் கைலாச நாதர் கோணேயை விட்டுப் பிரியும்போது, பசுவைப் பிரியும் கன்றாக, சகுந்தலையைப் பிரியும் துஷ்யந்தனைத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி வந்தோம்' என்றெழுதுகிறார் ஆசிரியர். கவி காளிதாசனின் சாகுந்தல நாடகத்தில் காதலன்—காதலி பிரிவுக் கட் டத்தில் சகுந்தலைதான் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு ஆசிரமம் நோக்கி நடக்கிறாள்.

பெங்களூர்.
5—7—69      ச. கல்யாணசுந்தரம்

ஸ்டேட் பாங்கு வேலைநிறுத்தத்தைப் பற்றிய தங்கள் உப தலையங்கம் நூற்றுக்கு நூறு சரியே. பாங்குகளைத் தேசிய மயமாக்கு தல் வேண்டும் என்ற கருத்தைக் கொண் டிருந்த என் நண்பர்கள்கூட, ஸ்டேட் பாங் கின் பொறுப்பற்ற உயர்தர அதிகாரிகளின் நியாயமற்ற, தேச விரோதமான இந்த ஸ்ட்ரைக்கினால் ஏற்பட்ட பாதிப்பின் விளை வைக் கண்டு அவ்வெண்ணத்தை அறவே கைவிட்டு விட்டனர். நானும் ஒரு பாங்கி யில் பணியாற்றுபவன் என்ற முறையி லும், ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் பெற் றுள்ள பல விசேஷச் சலுகைகளை அறிந்தவன் என்ற முறையிலும் ஆணித்தரமாகச் சொல் கிறேன், அவர்கள் ஸ்டிரைக் செய்தது மன் னிக்கவே முடியாத அடாத செயலாகும். ஐ. ஏ. எஸ். படித்து, ஒரு ஜில்லாவையே நிர்வாகம் செய்யும் கலெக்டர்களைவிட ஸ்டேட் பாங்கின் சாதாரண அதிகாரிகள் அதிகச் சம்பளம் பெறுகின்றனர். அவர்களின் வருட வருமானத்தைக் கணக்கெடுத்தால் இது தெரிய வரும். போதாக் குறைக்கு இப் போது 'போனஸ் கமிஷன் புண்ணியத்தால் அவர்களுக்குப் போனஸ் வேறு. இதைத் தவிர, வருடக் கடைசியில் மூந்நூறு ரூபாய் விசேஷ அலவன்ஸ், 'மிட்—அகடமிக்' அல வன்ஸ் என்று பல பெயரில் விசேஷ வரு மானங்கள். இவ்வளவையும் பெற்ற பின்ன ரும், அரசாங்கத்தின் கோடிக்கணக்கான ரூபாய்கள் தங்கள் பொறுப்பில் இருப்பதைப் பற்றிக் கிஞ்சித்தேனும் கவலையோ பயமோ இல்லாமல் பாங்கில் பணம் பத்திரப்படுத்தப் பட்டுள்ள அறையையே திறக்க மறுத்தனர். இதனால் வியாபாரிகள் பட்ட துன்பம் விவரிக்க இயலாதது. ஒரு வியாபாரி ரூ. 60,000 பெறுமான வெங்காயம் இந்த வேலை நிறுத்தத்தால் அழுகிக் கொண்டிருக்கிறது என்று சொல்லிக் கண்ணீர் விட்டார். ஒரு ஸ்திரீயின் நகைகள் பாங்கின் பாதுகாப்புப் பெட்டியில் மாட்டிக் கொண்டது. அவர்கள் வீட்டில் கல்யாணம் வேறு. இப்படி எத் தனையோ? பொதுஜனங்களுக்கு வியப்பென்ன வெனில், சமீபத்தில் பார்லிமெண்டில் சட்டமாக்கப்பட்ட 36 AD பாங்கு மசோதா வின்படி பாங்கு கட்டடத்துக்குள் ஆர்ப் பாட்ட கோஷம் போட்டால் ஆயிரம் ரூபாய் அபராதம் . அல்லது ஆறு மாதம் ஜெயில் என்றெல்லாம் இருந்தும் இந்த அரசாங்கம் என்ன செய்து கொண்டிருந்தது என்பதுதான். தெலிங்கானாத் தலைவிதான் 'முதல் அந்தஸ்து' பெற வேண்டியது என்று இருந்து விட்டார்களா ?

கோயமுத்தூர்
26—6—69      ஸ்ரீ வேணுகோபால்

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

